For private circulation only

Book Post

https://christianhistoricalsociety.in/

# கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்

விலை : ரூ 60 | பிப்ரவரி 2022 | இதழ் 21

திசை தெரியாமல் திகைக்காதிருக்க திருச்சபை வரலாறு தெரியவேண்டும்

## திருச்சபையில் பெண்கள்



கிறிஸ்தவ
# வரலாற்றுச் சுவடுகள்

மாத ஆய்விதழ் சந்தா விபரம்

| சந்தா விபரம் | உள்நாடு |
|---|---|
| தனிப்பிரதி | ₹ 60 + நன்கொடை |
| ஆண்டு சந்தா | ₹ 600 + நன்கொடை |
| ஐந்து ஆண்டு சந்தா | ₹ 3000 + நன்கொடை |

"கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்" மாத ஆய்விதழை நீங்கள் தொடர்ந்து பெற்றுக் கொள்ள G-Pay மூலம் நன்கொடை செலுத்த 91767 80001 என்ற எண்ணுக்கு செலுத்தவும் காசோலை மற்றும் வரைவோலை செலுத்த 'திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கம்' ( Tinnevelly Christian Historical Society ) என்ற பெயரில் எடுக்கவும்

**சந்தாவை வங்கி கணக்கில் செலுத்த**

Bank :- Federal Bank
Name :- Tinnevelly Christian Historical Society
Account number :- 1748 0200 0036 84
IFSC Code :- FDRL0001748




**கிறிஸ்தவ வரலாற்றுச் சுவடுகள்,**
கதவு எண் 2-2-3(4), வடக்குத்தெரு,
பங்களாச் சுரண்டை-627859,
தென்காசி மாவட்டம் (தமிழ்நாடு)
04633 290401

# ஆசிரியர் சுவடு

கிறிஸ்துவுக்குள் அன்பானவர்களே,

இறைமைந்தன் இயேசுவின் இனிதான நாமத்தினாலே உங்கள் அனைவருக்கும் திருநெல்வேலி வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக நன்றியினையும், வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

மண்ணினாலே ஆதாமை உருவாக்கிய கர்த்தர், ஆதாமின் விலா எலும்பிலிருந்து அவனுக்கு ஏற்ற ஒரு துணையை உண்டாக்கினார். பெண்கள் ஆண்களுக்கு ஏற்ற துணையாகவே படைக்கப்பட்டார்கள் என்பது வேதம் கூறுகின்ற உண்மையாகும். சில நூற்றாண்டுகளுக்கு முன்பு தமிழகம் ஆணாதிக்க சமுதாய சிந்தனையினால் நிறைந்திருந்தது. பெண்கள் எத்தனை பெரிய காரியங்களை செய்தாலும் அவைகள் பாராட்டப்படாமலும், அங்கிகரிக்கப்படாமலும் இருந்தது. திருநெல்வேலி பகுதியில் கிறிஸ்தவம் பரவுவதற்கு ஆண்கள் எவ்வளவு முயற்சிகளை எடுத்தார்களோ, அதைப் போன்று பெண்களும் முன்னனியில் நின்று கிறிஸ்துவின் அன்பினை பறைசாற்றினார்கள். இந்த மாத இதழில் 'திருச்சபை வளர்ச்சியில் பெண்களின் பங்கு' என்ற தலைப்பில் பல ஆராய்ச்சி கட்டுரைகளும், சில வரலாற்று துணுக்குகளும் கொடுக்கப்பட்டிருக்கின்றது. வரலாற்று பிரியர்களுக்கு இது ஒரு விருந்தாக அமையும் என்பதில் சந்தேகம் இல்லை.

மார்ச் மாதத்திற்கான தலைப்பாக **'கிறிஸ்தவ கீர்த்தனை கவிஞர்கள் பற்றிய வரலாறு'** கொடுக்கப்பட்டுள்ளது. அநேக தமிழ் கீர்த்தனை கலைஞர்கள் மக்களால் அறியப்படாமல் மறைந்துக் கிடக்கின்றார்கள். அவர்களின் வாழ்வை அறிந்து கொள்ளவும், அவர்கள் திருச்சபைக்கு பாடல்கள் மூலம் ஆற்றிய தொண்டினை பாராட்டவும் இத்தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கின்றது. எழுத்தாளர்கள் சிறந்த ஆராய்ச்சி கட்டுரைகளை இம்மாதம் பதினைந்தாம் தேதிக்குள்ளாக அனுப்பித்தர கேட்டுக் கொள்ளுகின்றேன். ஒவ்வொரு மாதமும் இப்புத்தகம் வெளிவருவதற்கு மிகுந்த பொருட் செலவுகள் உண்டு. அதற்கான தேவைகள் சந்திக்கப்பட ஜெபிக்க உங்களை அன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன். மேலும் இம்மாதாந்திர பத்திரிக்கையினை உங்கள் நண்பர்களுக்கும் அறிமுகம் செய்யுங்கள். இன்னும் வருங்காலங்களில் அநேக திட்டங்களை வைத்து செயல்பட்டுக் கொண்டிருக்கின்றோம். அவையாவும் ஆசீர்வதிக்கப்பட ஜெபித்துக் கொள்ளுங்கள்.

கடந்து வந்த பாதையினை அறியும் பரமனின் பணியில் ...

மன்னா செல்வகுமார்
பதிப்பாசிரியர்

வடிவமைப்பு
**சுஜித் ரெக்ஸ்**
75388 12218

பதிப்பாசிரியர்
**மன்னா செல்வகுமார்**
91767 80001

christianhistorical@gmail.com



# திருச்சபை வளர்ச்சியில் பெண்களின் பங்கு

கிறிஸ்தவம் தென் தமிழ்நாட்டில் வேகமெடுக்க ஆரம்பித்தது. உண்மையாக கிறிஸ்துவின் அன்பினால் ஈர்க்கப்பட்டு பலரும், கிறிஸ்துவின் அன்பினை எடுத்துக் கூறிய மிஷனெரிகளின் அன்பினால் ஒரு சிலரும் கவரப்பட்டு கிறிஸ்துவை ஏற்றுகொண்டனர். கிறிஸ்துவை ஏற்றுகொண்டதினால், அநேக பாடுகளை மக்கள் அனுபவித்துக் கொண்டிருந்தனர். சிலர் ஊரை விட்டு ஒதுக்கி வைக்கப்பட்டனர், சிலருக்கு அபராதம் விதிக்கப்பட்டது சிலர் துன்புறுத்தப்பட்டனர். இவ்வாறு ஆண் பெண் என்ற வித்தியாசம் இல்லாதபடி கிறிஸ்துவினை ஏற்றுகொண்ட எல்லாரும் துன்புறுத்தப்பட்டு வந்தனர். கிறிஸ்துவின் அன்பை ருசித்த பெண்கள் தங்கள் கணவனையும், தங்கள் பிள்ளைகளையும் கூட கிறிஸ்துவினிடத்தில் வழி நடத்தினார்கள். அநேக நேரங்களில் வரலாற்றின் பக்கங்களில் ஆண்கள் மட்டுமே வெளியே தெரிந்தாலும் கிறிஸ்தவம் நம் பகுதியில் வளருவதற்கு பெண்களின் பங்கு மிக அதிகமாகவே இருந்திருக்கின்றது.

### ஊழியத்தில் துணைநின்ற சபை ஊழியர்களின் துணைவியார்கள்

கனம் ரேனியஸ் ஐயரவர்களின் காலத்தில் கிறிஸ்தவம் திருநெல்வேலி பகுதியில் மிக வேகமாக பரவ ஆரம்பித்தது. ரேனியஸ் ஐயரவர்கள் ஆரம்பித்த பள்ளிக்கூடங்களும், ஆலயங்களும் அநேக மக்களுக்கு ஆசீர்வாதமாக அமைந்தது. அநேக மக்கள் கிறிஸ்துவின் அன்பை ருசிக்க ஆரம்பித்தார்கள். 1820ம் வருடம் ஜூலை மாதம் 7ஆம் தேதி அன்று பாளையங்கோட்டைக்கு மிஷனெரியாக குடும்பத்தோடு வந்திறங்கிய போது, சி.எம்.எஸ் திருச்சபை அதிகளவில் வளர்ச்சியடையாமல் இருந்தது. ஹாப்வ் ஐயரவர்கள் ரேனியஸிடம் ஒப்புவித்த சி.எம்.எஸ் சபைகள் மொத்தம் மூன்று. மூக்குப்பீறி, பொறையார் மற்றும் சிதம்பராபுரம் ஆகிய திருச்சபைகள் ஆகும். ஆனால் ரேனியஸ் ஐயரவர்களின் கடுமையான உழைப்பினாலும், விசுவாசமுள்ள ஜெபத்தினாலும் 1830ம் வருடத்தில் சபை பெரிதும் வளர்ச்சியினைக் கண்டது. 1830ம் ஆண்டு ஜூலை மாத கணக்கின்படி சி.எம்.எஸ் சபைகள் 268, கிறிஸ்தவக் குடும்பங்கள் 2,435, திருச்சபையார் 8,395 என்று வரலாற்றின் பங்கங்களில் காணமுடிகின்றது.

இத்தனை பெரிய வளர்ச்சிக்கு பெரிதும் துணை நின்றவர்கள், ரேனியஸ் ஐயர் அவர்கள் நியமித்த சபை ஊழியர்கள் ஆவர். சபை ஊழியர்களிடத்திலே ரேனியஸ் ஐயரவர்கள் மிக கண்டிப்போடு காணப்படுவார்கள். அவர்களின் ஆன்மிக வாழ்வில் மிகவும் நாட்டம் கொண்டவர்களாக இருப்பார்கள். இறையியல் கல்லூரியில் படிக்கும் போது மிகுந்த கண்டிப்புடன் நடந்துக் கொள்ளுவார்கள். ஆலய ஆராதனைகளை நடத்துவதோடு கூட அவர்களது பணி நிறைவு பெறுவதில்லை. காலை நேரங்களில் சபை ஊழியர்கள் ஆத்துமாக்களை தேடி செல்ல வேண்டும். பனை ஏறும் தொழில் செய்பவர்களை பனங்காட்டில் சந்தித்து அவர்களுக்கு சுவிசேஷம் கூறுவார்கள். பதனீரைக் காய்ச்சுக் கொண்டிருக்கும் பெண்களிடம் இயேசுவின் அன்பினை பகிர்ந்துக் கொள்ளுவார்கள். வேத வசனங்களை கற்று கொடுப்பதிலும், அவர்களுடன் உரையாடுவதிலும் இயேசுவின் அன்பினை எடுத்துக் கூறுவார்கள். 1830ம் ஆண்டிலே சபை ஊழியர்களின் எண்ணிக்கை 68 ஆக உயர்ந்திருந்தது.

ரேனியஸ் ஐயவரர்களின் நேரடி கவனிப்பில்

திருச்சபைகள் இல்லையென்றாலும், ஐயரவர்கள் நியமித்திருந்த சபை ஊழியர்களின் ஊழியம் பெரிதளவில் மக்களை திருச்சபைகளில் இணையச் செய்தது. சபை ஊழியர்களின் சாட்சி மிகுந்த வாழ்வும், மற்றவர்களின் மேல் அவர்கள் கொண்ட கரிசனையும் திருச்சபை வளர உதவியது. சபை ஊழியர்களின் மனைவிகள் தங்கள் கணவன்மாரோடு கூட இணைந்து சபை ஊழியங்களிலே தங்களால் இயன்ற உதவிகளைச் செய்தார்கள். அநேக சபை ஊழியர்களின் துணைவியார்கள், திருமணம் செய்த போது அவர்கள் கிறிஸ்தவர்களாக கூட இல்லை. சிலர் ஞானஸ்நானம் பெறுவதற்கு ஆயத்தக்காரர்களாகவே இருந்தார்கள். இப்படிப்பட்ட பெண்கள் தங்கள் திருமண வாழ்க்கைக்குப் பின்னர், தங்களையும் தங்கள் கணவன்மார்களோடு கூட சேர்ந்து தங்கள் ஊழியங்களை நிறைவேற்றினார்கள். சபை ஊழியர்களின் மனைவிமார்களில் ஒரு சிலரே கல்வி அறிவு கொண்டவர்களாக இருந்திருக்கின்றார்கள். அநேகர் கல்வியறவு இல்லாதவர்களாகவே இருந்தார்கள். எனினும் தங்கள் கணவனோடுசெய்த ஊழியம்சிறப்பாக இருந்திருக்கின்றது.

ஊழியர்களின் எளிமையான வருமானத்தில் தங்கள் குடும்பத்தினை மிகச் சிறப்பாக நடத்திவந்திருக்கின்றார்கள். குடும்பத்தினைக் குறித்தக் காரியங்களை சிறப்பாக கவனித்துக் கொண்டபடியினால் ஊழியத்தில் அதிக கவனத்தினை சபை ஊழியர்கள் செலுத்தியிருக்க முடிந்தது. அதுமட்டுமல்லாது, சபை ஊழியர்களின் ஊழியத்திலும், அவர்களின் மனைவி அதிக பங்குப்பெற்றிருக்கின்றார்கள். உதாரணமாக வீடுகளைச் சந்திப்பது, வீட்டில் இருக்கும் பெண்களுக்கு சுவிசேஷம் அறிவிப்பது, சிறுபிள்ளைகளுக்கு கற்று கொடுப்பது, வீடு சந்திப்பு, வியாதியின் படுக்கையில் இருப்பவர்களுக்கு தங்களாலான உதவிகளை செய்வது, காணிக்கை கொடுப்பதில் மக்களை உற்சாகப்படுத்துவதென்று பலவிதமான பணிகளை தங்கள் கணவன்மார்களோடு கூட இணைந்து செய்திருக்கின்றார்கள். சபை ஊழியர்களோடு இவர்கள் செய்த உன்னதமான ஊழியத்தின் விளைவாக அநேக மக்கள் இயேசுவை ஏற்றுக்கொண்டு திருச்சபை வளர்ந்து பெருகியிருக்கின்றது.

## ஊழியத்தில் துணைநின்ற குருவானவர்களின் துணைவியர்கள்



சபை ஊழியர்களின் துணைவியார் போன்று அநேக குருவானவர்களின் மனைவியரும் போற்றத்தக்கதொரு வாழ்வை வாழ்ந்திருக்கின்றார்கள். கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்களின் வரலாற்று வரிகள் மூலமாக ஒரு சில குருவானவர்களின் அர்ப்பணிப்பு மிகுந்த துணைவியார்களைக் குறித்து அறிந்துக் கொள்ள முடிகின்றது.

கிறிஸ்தியாநகரம் மிஷன் சரித்திரத்தில் கனம். யோபு ஐயரவர்களின் துணைவியார் குறித்து சாட்சியுள்ள குறிப்புகளைக் கொடுத்திருக்கின்றார்கள். கனம் பிரதட்டன் ஐயரவர்களுக்கு உதவியாளராக சாயர்புரத்தில் ஊழியம் செய்து கொண்டிருந்த யோபு ஐயரவர்களை, கிறிஸ்தியாநகரம் மிஷனை கவனிக்கும்படியாக யோபு ஐயரவர்கள் அனுப்பப்பட்டார்கள். உதவி குருவாயிருந்த

யோபு ஐயரவர்களுக்கு 1866ம் ஆண்டு, சென்னை பேராயர் அவர்களால் பாளையங்கோட்டையில் வைத்து குரு அபிஷேகம் கொடுக்கப்பட்டு கிறிஸ்தியாநகரத்திற்கு குருவானவராக நியமிக்கப்பட்டார்கள். கனம் யோபு ஐயரவர்களின் ஊழியக்காலம் கிறிஸ்தியாநகர மிஷனுக்கு பொற்காலம் என்றோ, என்று கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள் குறிப்பிடுகிறார்கள்.

கனம் யோபு ஐயரவர்களின் ஊழியத்தினில் மிகவும் உறுதுணையாக இருந்தவர்கள் அவரது மனைவி திருமதி செல்வம் அம்மாள் அவர்கள். செல்வம் அம்மாள் அவர்கள் நாசரேத்து சபையின் முற்பிதாக்களில் ஒருவராகிய கறுப்பன் குக்கந்தரின் பேத்தியும், மூக்குப்பிறியின் பிரபல உபதேசியார் சுவாமியடியான் உபதேசியாரின் மகளுமாவார். சுவாமியடியான் உபதேசியார், மூக்குப்பேறியில் இந்திய ஏக இரட்சகர் திருச்சபை உருவாகுவதற்கு காரணமாயிருந்த சட்டாம்பிள்ளைக்கு நெருங்கிய நண்பர் ஆவார். கேமரர் ஐயரின் சூழ்ச்சியினால் சபை ஊழியர் பொறுப்பில் இருந்து நீக்கப்பட்டதின் நிமித்தமாக, சட்டாம்பிள்ளை அவர்கள் இந்திய ஏகரட்சகர் திருச்சபையில் சேர்ந்தார். எனினும் கேமரர் ஐயரவர்களின் காலத்திற்கு பின்னர், இந்திய ஏக இரட்சகர் சபையினர் சனிக்கிழமை அன்று தங்கள் ஓய்வுநாளை மாற்றியதின் நிமித்தமாக, மறுபடியுமாக மன்னிப்புக் கோரி சபையில் இணைந்தார். இப்படி ஒரு வைராக்கியமான பாரம்பரியத்தில் பிறந்த செல்வம் அம்மாளின் ஊழியம் மிக உன்னதமாக இருந்தது.

யோபு ஐயரவர்களோடு கூட சேர்ந்து வீடுகளைச் சந்திப்பதிலும், வியாதியஸ்தர்களுக்காக ஜெபிப்பதிலும் மிகுந்த பாரம் கொண்டவர்கள். சபையின் அனைத்து பெண்களையும் அறிந்து வைத்திருப்பார்கள். ஒவ்வொரு குடும்பத்தின் சூழ்நிலைகளையும் மிக நேர்த்தியாக அறிந்து, அவர்களுக்கு என்ன தேவைகள் உண்டோ, அவற்றை செய்து கொடுப்பார்கள். செல்வம் அம்மாளின் தகப்பனார் திரு சுவாமியடியான் உபதேசியாரின் குடும்பம் நாட்டு மருத்துவம் செய்வதில் முன்னோடியாக விளங்கியது. எனவே அவற்றில் சிலவற்றை அம்மாளும் கற்றிருந்தப்படியினால் திருச்சபை மக்களுக்கு மிகுந்த உதவியாக இருந்தது. சபையில் யாரேனும் சுகவீனமாக இருப்பார்களென்றால் அவர்களுக்கு மருந்துக்களைக் கொடுத்து அவர்களுக்கு அற்புத சுகத்தைக் கொடுத்திருக்கின்றார்கள். கிறிஸ்தியாநகரம் திருச்சபை மக்களுக்கு ஒரு உன்னத தாயாராகவே


வேதாகம ஸ்திரிகள்

விளங்கியிருக்கின்றார்கள்.

திருச்சபை குடும்பங்களுக்குள்ளாக ஏதேனும் சண்டைகள் உண்டாயிருக்குமென்றால், அவ்விரண்டு குடும்பங்களுடனும் பேசி, அக்குடும்பங்களை சமாதானம் செய்து வைத்திருக்கின்றார்கள். பாடல் தாலந்துக்களை மிக நேர்த்தியாக அம்மையார் அவர்கள் பெற்றிருந்தப்படியினால், ஞானப்பாட்டுகள், கீர்த்தனைகள் மற்றும் சில பாடல்களை பாடியும், கற்று கொடுத்தும் சிறப்பித்திருக்கிறார்கள். கனம் கிறிஸ்துதாஸ் ஐயரவர்கள், யோபு ஐயரவர்களின் துணைவியாக செல்வம் அம்மா அவர்களை கிறிஸ்தியாநகரத்து மக்கள் **'பரிசுத்தவாட்டி'** என்று அழைத்ததாக குறிப்பிட்டிருக்கின்றார்கள்.

### ஊழியத்தில் துணைநின்ற வேதாகம ஸ்திரிகள்

பெண்கள் மத்தியில் ஊழியம் சிறப்புற நடைபெற காரணமாயிருந்தவர்கள் வேதாமக ஸ்திரிகள் ஆவார்கள். கணவன்மார்கள் வேலைகளுக்குச் சென்ற பிறகு, வீட்டில் பெண்கள் தனிமையாக இருப்பார்கள். அவர்களை சந்தித்து கிறிஸ்துவின் அன்பினைக் கூறி, கிறிஸ்துவினிடத்தில் வழிநடத்தியவர்கள் வேதாகம பெண்கள் ஆவார்கள்.

குலசேகரப்பட்டினம் பகுதியில் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் கிறிஸ்தவம் மிக வேகமாக வளர ஆரம்பித்தது. ஆரம்பக்காலங்களில் சத்தியநாதன் ஐயரவர்களின் ஊழியத்தின் பலனாக பலர் மற்ற மதங்களிலிருந்து கிறிஸ்தவத்திற்கு வந்தார்கள். குலசேகரப்பட்டினம் திருச்சபையில் முதல் முதலாவதாக இணைந்தவர்கள் ரோமன் கத்தோலிக்க திருச்சபையை சார்ந்தவர்கள் தான். அதன் பின்னரே இந்து மார்க்கத்திலிருந்து சுமார் 60 பேர் இணைந்தார்கள். திருச்சபையில் இணைந்தவர்கள் அக்காலத்தில் சமுதாயத்தால் பின் தள்ளப்பட்ட நிலையில் வாழ்ந்து வந்தார்கள். கிறிஸ்தவர்களாக மாறுவதை பொறுக்காத மேல் ஜாதியினர் என்று தங்களை அழைத்துக் கொண்ட கோனேரி ராயன் என்பவரால் குலசேகரப்பட்டிணத்து கிறிஸ்தவர்களுக்கு மிகுந்த உபத்திரவம் உண்டாயிற்று. கிறிஸ்துவை ஏற்று கொண்டவர்களாக இருப்பார்களென்றால் அவர்களிடம் இரண்டு மடங்கு தீர்வை வசூலித்து துன்னப்படுத்தினான். குலசேகரப்பட்டணத்தில் கட்டப்பட்டிருந்த சிறிய ஆலயம் ஒன்று இடித்து தரைமட்டமாக்கப்பட்டது. ஆனாலும் கிறிஸ்துவின் அன்பு அச்சபையாரை நெருக்கி ஏவவே மறுபடியுமாக திருச்சபை வளர்ந்து பெருக ஆரம்பித்தது.

சமுதாயத்தால் புறக்கணிக்கப்பட்ட மக்களே கிறிஸ்துவின் அன்பில் மிகவும் ஈர்க்கப்பட்டு கிறிஸ்தவர்களாக மாறியிருந்தார்கள். உயர்ந்த ஜாதி என்று தங்களை அழைத்துக் கொண்டவர்கள் தீவிர இந்துக்காளகவே வாழ்ந்து வந்தார்கள். எனினும், நிலை மாற ஆரம்பித்தது. 1873ம் ஆண்டு கிறிஸ்தியாநகர பள்ளிக்கூடத்தை மேற்பார்வையிட்டுக் கொண்டிருந்த திருமதி. ஸ்கார்ப்ரோ அமையார் அவர்களின் தரிசனத்தில் உருவான ஊழியம் குலசேகரப்பட்டணத்தில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது. திருமதி. ஸ்கார்போரா அம்மையார் அவர்கள் நாசரேத்தில் பணியாற்றிய கனம் பிரதர்ட்டன் ஐயரவர்களின் உடன்பிறந்த சகோதரி ஆவார். இவரும் பல மிஷன் பள்ளிக்கூடங்களின் பொறுப்பினை ஏற்று சிறப்புற செய்து வந்தார். குலசேகரப்பட்டணத்து உயர் ஜாதி இந்துக்களின் வீடுகளை ஆண்கள் சென்று சுவிசேஷம் கூற இயதால சூழல் நிலவவே, அவர்களை பெண்களைக் கொண்டு சந்திக்க ஆயத்தமானார். அதின்விளைவாக வேதாகம பெண்களை நியமித்தார். வேதாகம பெண்கள் மூலமாக குலசேகரப்பட்டணத்தில் அநேக மக்கள் கிறிஸ்துவை ஏற்று கொண்டார்கள்.

### முடிவுரை

பரிசுத்த வேதாகமத்தில் அநேக பெண்கள் திரைமறைவாகவே தங்கள் ஊழியங்களை நிறைவேற்றியிருப்பார்கள். வெளிப்படையாக தங்கள் ஊழியங்களை செய்திருந்தாலும் ஆணாதிக்க சமுதாயத்தினால் அவர்கள் புகழ் வெளிவராமல் மறைக்கப்பட்டிருக்கும். அதேப்போன்றுதான் ஆரம்பக்காலங்களில் அநேக பெண்கள் நம் பகுதியில் கிறிஸ்தவம் வளரவும், அநேகர் கிறிஸ்துவை ஏற்று கொள்ளவும் உதவியிருந்தார்கள். ஆரம்பக்காலத்தில் கிறிஸ்துவை ஏற்றுகொண்டு ஊழியத்தினை நிறைவேற்றிய கிளாரிந்தா அம்மையாரின் பெயரும், ஊழியமும் வெளியுலகத்திற்கு வந்தது போல மற்றெந்த பெண்களின் பெயர்களும் வெளிவரவில்லை. எனினும் இலைமறை காயாக அவர்கள் செய்த ஊழியத்தின் பலனே இன்று திருநெல்வேலி மற்றும் தூத்துக்குடி ஆகிய மாவட்டங்களில் கிறிஸ்துவை அறிந்தோர் எண்ணிக்கை அதிகமாக இருக்கின்றது.

**அருள்திரு. H. ஜான் சாமுவேல்**
**பண்டாரசெட்டிவிளை**

சத்தமில்லாத சத்தத்தின் செய்கை



சகோதரி

# பாக்கியத்தாய் அக்கா

**சகோதரி பிரேமா**

சுவர்மேல் ஏறின பிள்ளை தவறி கீழே விழுந்து விட்டாள். இடதுகால் இடுப்புப் பக்கத்தில் தொடை எலும்பு உடைந்து விட்டது. பல மாதங்கள் சிகிச்சை செய்தும் அது சரியாகவில்லை. ஆனால் அது சிறுமிக்கு ஓடவோ, நடக்கவோ, ஏறவோ தடையாகவே இல்லை. இது ஆண்டவரால் அனுமதிக்கப்பட்டது என்பதை பின்னால் புரிந்துகொண்டாள் அவளது பிற்கால ஊழியத்திற்கும் அது தடையாக இல்லை.

8 வயதில் கோவில்பட்டியிலுள்ள TDTA பள்ளியில் சேர்ந்து 5 ஆம் வகுப்பு வரை படித்தாள். 1934 ஆம் ஆண்டில் அருமை தாயார் ஞானசுந்தரி தேவராஜ்யம்

தேவனால் தெரிந்துகொள்ளப்பட்டு பயன்படுத்தப்பட்ட சகோதரி பாக்கியத்தாய் பிச்சமுத்து (பெரியம்மா). 1926 ஆம் ஆண்டு செப்டம்பர் 11 ஆம் தேதி பிச்சமுத்து ஐயாவுக்கும் ஞானசுந்தரி அம்மாவுக்கும் 7வது பிள்ளையாக பாக்கியத்தாய் பிறந்தாள். சொந்தவூர் கோவில்பட்டி உடன் பிறந்தவர்கள் 4 அண்ணன்மார், 2 அக்காமார், 1 தம்பி, 2 தங்மைமார். 10 பேரும் ஆண்டவருக்கென வளர்க்கப்பட்டார்கள்.

பாக்கியத்தாய் 4 வயதாக இருக்கும்போது காலையில் கண்விழித்ததும் பக்கத்தில் படுத்திருந்த அம்மாவை காணோமே என தேடினாள். அம்மா பக்கத்து தோட்டத்தில் கீரை பறிக்க போயிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். குட்டி பாக்கியத்தாய் எழும்பி அழுதுகொண்டே அம்மாவைத் தேட போனாள். ஒரு மண்சுவரைத் தாண்டி போகவேண்டி இருந்ததால், சென்றடைந்தார்கள். பின் அரசாங்கப் பள்ளியில் படித்தாள். நிறைய தோழிகள் உண்டு, கூடி சினிமா கதை, நாவல் கதைகளைப் பற்றிப் பேசுவதில் அதிக மகிழ்ச்சி, ஒருநாள் பள்ளிக்கூடம் போகும் வழியில் பாக்கியத்தாய் முன்னால் இயேசு நடந்து போய்க்கொண்டிருந்ததைக் கண்டு தோழிகளிடம் ஏய் அதோ இயேசு போகிறார் என்றாள். மற்றவர்களுக்கு தெரியவில்லை. பாக்கியத்தாய் வேகமாக சென்றாள். இயேசு அப்படியே மேலே மேகத்திற்குள் போய்விட்டார். விழித்தாள் அது ஒரு சொப்பணம். ஆனால் இயேசுவைப் பின்பற்ற ஆரம்பித்தாள். 8 ஆம் வகுப்பு முடித்து 9 ஆம் வகுப்பிற்கு பாளையங்கோட்டை சாராள் தக்கர் உயர்நிலைப்பள்ளியில் ஹாஸ்டலில் தங்கி படித்தாள். அங்கு நடந்த காலை மாலை ஜெபம், நூற்றாண்டு மண்டபம் சிறுவர் ஆராதனை எல்லாம் ஆவிக்குரிய உற்சாகமூட்டுவதாய் இருந்தது.

பள்ளியில் ஆங்கில பாடத்தில் Francis of Assisi என்பவரின் வாழ்க்கை வரலாறு Nondetail பாடமாக இருந்தது. இவருடைய வாழ்க்கையில் தன் உலக இன்பம் யாவையும் விட்டுவிட்டு இயேசுவின் அன்பைப் பெற்று இயேசுவுக்காக ஒரு ஏழையாக பல பாடுகள்பட்டார். இயேசு பாக்கியத்தாயுடன் பேசினார். நீ எனக்காக என்ன செய்தாய்? சில நாட்களாக இந்த கேள்வி மனதில் வந்துகொண்டே இருந்தது. கண்களில் கண்ணீர் வந்து கொண்டே இருந்தது, தோழிகளிடமும் பேசவில்லை. அழுது அழுது ஜெபித்துக்கொண்டே இருந்தாள்.

ஒரு சனிக்கிழமை ஹாஸ்டலில் உள்ள ஜெப அறையில் முழங்கால் படியிட்டு ஆண்டவரிடம் தன்னை முற்றிலுமாக அர்ப்பணித்து ஜெபித்தாள்.

கலாத்தியர் 2:20 மூலமாக ஆண்டவர் இரட்சிப்பின் நிச்சயத்தைக் கொடுத்தார். இனி நானல்ல கிறிஸ்துவே எனக்குள் பிழைத்திருக்கிறார். சந்தோஷமாக மற்ற மாணவியரிடம் பகிர்ந்துகொள்ள ஆரம்பித்தாள். சில தோழிகள் பாக்கியத்தாயுடன் ஜெபிக்க விரும்பினர். ஜெப அறையில் ஜெபக்குழு ஒன்று ஒழுங்காக நடந்தது. அநேகர் இயேசுவை ஏற்றுக்கொண்டனர். ஆண்டவர் அவர்களை அந்த வயதிலேயே ஊழியத்திற்கென ஆயத்தப்படுத்தினார்.

இதற்குப்பின் ஆசிரியர் பயிற்சி பெறும் வாய்ப்பு கிடைத்தது. பயிற்சி முடித்து கோவில்பட்டியில் வீட்டுப் பக்கத்திலுள்ள பள்ளியில் வேலை பார்த்தார்கள். வகுப்பில் சிறுவர்களுக்கு இயேசுவைப் பற்றி அறிவித்து இயேசுவண்டை வழிநடத்தினார்கள். அரசாங்கப் பள்ளியில் லீலா வேதமணி என்ற சகோதரி வேலைப் பார்த்தார்கள். அவர்களும் ஆண்டவருக்கு வாலிபர் கூட்டம், பெண்கள் கூட்டம் இதையெல்லாம் உற்சாகமாக செய்து வந்தார்கள். சனிக்கிழமைதோறும் இருவரும் கிராம ஊழியம் செய்தார்கள்.

1952 ஆம் ஆண்டு கோவில்பட்டியில் முதன்முறையாக VBS (விடுமுறை வேதாகமப் பள்ளி) நடந்தது. பங்காரப்பேட்டை வேதாகம கல்லூரியில் வேலைப் பார்த்த மார்கன் அம்மாவும், அப்போது அங்கு மாணவனாக இருந்த P.சாமுவேல் (பாக்கியத்தாய் அக்காவின் சகோதரர்) இருவருமாக கோவில்பட்டியில் VBS நடத்தினார்கள். 8 ஆசிரியர்களும் 72 சிறுவர்களும் பங்கெடுத்தார்கள். பாக்கியத்தாய் அக்காவும், லீலா அக்காவும் அதில் ஆசிரியராக பங்கெடுத்தார்கள். தொடர்ந்து ஒவ்வொரு வருடமும் VBS நடந்தது.

1956 ஆம் ஆண்டு பேராயர் ஜெபராஜ் ஐயா அவர்கள் கேட்டுக் கொண்டதன் பேரில் ஆண்டவர் சித்தப்படி சகோதரி மார்கன் அம்மா அவர்கள் திருநெல்வேலி திருமண்டலத்திற்கு வந்து இங்கேயே தங்கி சிறுவர் ஊழியம் செய்ய தீர்மானித்தார்கள். லீலா அக்காவும் ஆசிரியர் பணியை ராஜினாமா செய்துவிட்டு மார்கன் அம்மாவுடன் இணைந்து ஊழியம் செய்தார்கள்.

1958 ஆம் ஆண்டு பாக்கியத்தாய் அக்காவும் ஆசிரியர் பணியை ராஜினாமா செய்ய தீர்மானித்தார்கள். அப்பா (பிச்சமுத்து) அவர்கள் அதிக கோபப்பட்டார்கள். திரும்பிவராதே என்றுதிட்டினார்கள். ஆனால் வெகுசிறப்பாக செய்தார்கள். மூவருமே CSI Order Of Sister - தென்னிந்திய திருச்சபையின் சகோதரிகள் ஐக்கியத்தின் அங்கத்தினர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. பங்காரப்பேட்டை வேதாகம கல்லூரியில் 2 ஆண்டுகள் படித்தார்கள்.

1959 ஆம் ஆண்டு VBS இயக்குனர் பயிற்சி முகாம் நடத்தப்பட்டது. 28 பேர் பங்கு பெற்றார்கள். தொடர்ந்து ஒவ்வொரு வருடமும் நடத்தப்படும் VBS பயிற்சி முகாமில் அநேக வாலிபர்கள் பங்குபெற்று ஆண்டவரை சொந்த இரட்சகராக ஏற்றுக்கொண்ட அனுபவத்தோடு தங்கள் இடங்களில் VBS வகுப்புகளை நடத்தினார்கள்.

1972 ஆம் ஆண்டு மார்கன் அம்மா தன் சொந்த நாடு திரும்ப தீர்மானித்தார்கள். பொறுப்பை சகோதரி பாக்கியத்தாய் அக்கா கையில் கொடுத்துச் சென்றார்கள். பாக்கியத்தாய் அக்கா வெகு திறமையோடு தேவன் அர்ப்பணித்த சகோதரிகளையும் பயிற்றுவித்தார்கள்.

1975 ஆம் ஆண்டு VBS ஊழியத்தின் ஒரு கிளையாக ஆதரவற்ற குழந்தைகளுக்கு கவனிக்கும் பொறுப்பை ஏற்றார்கள். கிறிஸ்துவின் அன்பை அந்த சிறுவர்களுக்கு பகிர்ந்தளித்தார்கள். அன்பு பெரியம்மாவாக இருந்து பிள்ளைகளை வளர்த்தார்கள். இன்றைக்கு அந்த பிள்ளைகள் இந்தியாவின் பல மாநிலங்களில் மிஷனெரிகளாக உள்ளார்கள்.

1989 ஆம் ஆண்டு VBS ன் கிளை ஒன்று குஜராத்தில் ஆரம்பித்து சகோதரி திலகா அந்த பொறுப்பை ஏற்று நடத்தி வருகிறார்கள்.

2003 ஆம் ஆண்டு அக்காவுடைய ஜெபத்தாலும் பிரயாசத்தாலும் VBS Training நடத்துவதற்கென சொந்தமான கட்டடம் கட்டப்பட்டது. இன்றுவரை VBS Training program நல்ல முறையில் நடத்தப்பட்டு வருகிறது. 2021 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 19 ஆம் நாள் நல்ல போராட்டத்தைப் போராடி 96 வது வயதில் ஓட்டத்தை முடித்தார்கள்.

## திருநெல்வேலி திருச்சபையின் தாய்

# குளோரிந்தா அம்மையார்

வரலாறும் மறுபக்கமும்

### குடும்பப் பூர்வீகம்

திருநெல்வேலி திருச்சபையின் தாய் என புகழ்ந்து அழைக்கப்படும் குளோரிந்தாவின் இயற்பெயர் கோகிலா லட்சுமி. 1674 இல் தஞ்சாவூரை தலைமையிடமாகக் கொண்டு ஆட்சி செய்து வந்த தஞ்சை நாயக்கர் மரபைச் சார்ந்த செங்கமலதாசை தோற்கடித்து மராட்டிய பேரரசர் சிவாஜி அவர்களின் தம்பியால் தஞ்சாவூரில் மராட்டிய வழிமரபு ஆட்சி தொடங்கி வைக்கப்பட்டது. தஞ்சாவூரில் மராட்டிய மன்னர் ஆட்சி ஏற்பட்டகாலத்தில் புரோகிதர் பணி செய்வதற்காக மராட்டிய பிராமணர்களும் தஞ்சாவூரில் குடியேறினர். அவ்வாறு குடியேறியவர்களில் தஞ்சாவூர் அரண்மனையில் தலைமை புரோகிதராகப் பணிசெய்தவரின் மகளாக பிறந்தவரே கோகிலா லட்சுமி. தந்தை தலைமை புரோகிதராக பணி செய்த காலத்தில் சென்னையில் இருந்த ஆங்கில கிழக்கிந்திய கம்பெனியின் படை உதவியைப் பெற்று சாயாஜி என்பவர் 1749 முதல் 1765 வரை 16 ஆண்டுகள் ஆட்சி செய்து வந்தார். கிழக்கிந்திய கம்பெனியின் படைப்பிரிவு தஞ்சாவூர் அரண்மனையில் உதவியாக இருந்தது அதில் பணி செய்தவரே லிட்டில்டன்.

### சிறு வயது பருவம்

தஞ்சாவூர் அரண்மனைத் தோட்டத்தில் சிறுமி கோகிலா லட்சுமி மலர்களை பறித்து விளையாடிக் கொண்டிருந்தபோது நச்சுப்பாம்பு அவரை கடித்து விடுகிறது அப்போது அப்பகுதியில் தஞ்சாவூர் மன்னருக்கு உதவியாக இருந்த ஆங்கிலப் படையைச் சேர்ந்த போர்வீரன் லிட்டில்டன் ஓடிவந்து தமது வாளால் பாம்பு கடித்த இடத்தை கீரி தன் வாயால் நஞ்சை உறிஞ்சி துப்பி சிறுமி கோகிலாவை பிழைக்க வைத்தார். படைப்பிரிவு சென்னையிலும் இருந்ததால் அங்கும் பணி செய்தார்.

நாவலாசிரியர் மாதவையா அவர்களால் எழுதப்பட்ட ‘கிளாரிந்தா’ (நம்முடைய மாத இதழில் தொடராக வெளிவந்து கொண்டு இருக்கின்றது) வரலாற்று நாவல் நூறு ஆண்டுகளுக்கு முன்பாக நாவலாசிரியர் மாதவையா அவர்களால் எழுதப்பட்ட ‘கிளாரிந்தா’ ஆங்கில வரலாற்று நாவலில் குளோரிந்தாவின் குடும்பம், பூர்வீகம்,



அவரது தந்தையின் மரணம், மிக இளவயதில் வயது முதிர்ந்த நபருடன் விருப்பம் அற்ற நிலையில் அவருக்கு ஏற்படுத்தப்பட்ட கட்டாய திருமணம், குடும்ப வாழ்வின் நன்மைகளை அனுபவிக்க இயலாத அவலம், கொஞ்ச நாட்களிலேயே ஏற்பட்ட கணவரின் மரணம் போன்ற காரியங்களை நாம் வாசிக்க முடிகிறது அதில் பல மாறுபட்ட சம்பவங்களும் காணப்படுவதால் அந்த பெயர்களையோ நாவலில் கொடுக்கப்படும் வரலாற்று நிகழ்வுகளையோ அப்படியே முழுமையாக ஏற்க இயலாத நிலை உள்ளது. நாவலின் நிறைவில் கர்னல். லிட்டில்டன் சுகவீனம் காரணமாக பாளையங்கோட்டையில் மரணமடைந்து குளோரிந்தாவால் கட்டப்பட்ட தேவாலய வளாகத்தில் அடக்கம் செய்யப்பட்டதாக கல்லறை இருப்பதாக ஒரு தகவலும் அதில் காணப்படுகின்றன.

### உடன்கட்டை ஏற நிர்ப்பந்திக்கப்பட்ட கோகிலா லட்சுமி

பல ஆண்டுகளுக்குப் பின் லிட்டில்டன் தலைமையில் ஆங்கிலப் படை தஞ்சாவூருக்கு அனுப்பப்பட்டது. தஞ்சாவூரின் வெளிப்புறத்தில் சாலையில் படை வந்து கொண்டிருந்தபோது ஆற்றங்கரையை ஒட்டிய மேடான பகுதியில் ஓர் கூட்டம் நின்று கொண்டிருந்தது அடுக்கப்பட்ட விறகு கட்டைகளின் மேல் ஒரு சடலம் வைக்கப்பட்டிருந்தது. பிணமானவரின் இளம் மனைவியை கட்டாயப்படுத்தி சடலத்தை சுற்றிவரச் செய்து பின் சடலத்தில் நெய் ஊற்றி விறகு கட்டைகளுக்கு தீ வைக்கப்பட்ட போது இளம் மனைவியையும் சடலத்தோடு எரிப்பதற்கு கட்டாயப்படுத்தி தள்ளி விடும் சூழலில் படைக்கு தலைமை வகித்த கேப்டன் லிடடில்டன் ஓடிவந்து இளம்பெண் கோகிலாவை மீட்டார்

இதைக் கண்ட பிராமணர்கள் கேப்டன் லிட்டில்டனிடம் கடும் வாக்குவாதத்தில் இறங்கினர் சடலத்தோடு இளம்பெண்ணும் எரிக்கப்பட வேண்டும் என்றனர். உடனடியாக அந்த இளம்பெண்ணை தன்னுடைய குதிரையில் வைத்து தஞ்சாவூர் அரண்மனைக்கு அருகில் படையினர் இருந்த பகுதிக்கு இளம் பெண்ணை கொண்டு வந்தார். தஞ்சாவூர் அரசரிடம் அந்த இளம்பெண்ணை குடும்பத்தாரிடம் சேர்க்க கூறினார் தஞ்சாவூர் அரசரும் முயற்சிகளை மேற்கொண்டார் ஆனால் இளம் பெண் கோகிலாவின் குடும்பத்தினர் கோகிலாவை ஏற்க மறுத்துவிட்டனர். தஞ்சாவூர் அரசர் அந்த இளம்பெண்ணை லிட்டில்டன் கொண்டு செல்ல ஆணையிட்டார்.

### ராணுவ சட்ட திட்டம்

ராணுவத்தில் பணி செய்யும் ஒருவர் திருமணமாகி குடும்பமாக தங்கி இருந்தால் ராணுவப் பணி பாதிப்படையும் என்பதற்காக தனித்திருந்து ராணுவப் பணி செய்வோம் என எழுதிக் கொடுக்கும் போது மட்டுமே அவர்களை இராணுவத்தில் சேர்ப்பார்கள் அந்த அடிப்படையில் லிட்டில்டனும் எழுதிக் கொடுத்திருந்தபடியால் கோகிலாவை முறைப்படி திருமணம் செய்து வாழ அவரால் இயலவில்லை.

### கர்னல் பதவி உயர்வும் பாளையங்கோட்டைக்கானப் பணி மாற்றமும்

1773 இல் லிட்டில்டன் ராணுவபடையில் கர்னல் ஆக பதவி உயர்வு பெற்றார் பாளையங்கோட்டையில் இருந்த படைப்பிரிவுக்கு மாற்றப்பட்டார். பாளையங்கோட்டைக்கு தம்மோடு கோகிலாவையும் அழைத்துவந்தார் இருவரும் திருமணமாகாத நிலையில் ஒன்றாக தங்கி வாழ்ந்து வந்தார்கள்.

### தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களின் பாளை வருகை

தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் திருமுழுக்கு ஆராதனை நடத்த பாளையங்கோட்டைக்கு வந்திருந்தார்கள் லிட்டில்டன் மூலம் கிறிஸ்தவ நற்செய்தியை கேட்டு கிறிஸ்தவராக மாறி இருந்த கோகிலா திருமுழுக்குப் பெற விரும்பி கர்னல். லிட்டில்டன் உடன் தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களை சந்தித்து திருமுழுக்கு கேட்டார். இருவரும் முறைப்படி திருமணம் செய்து கொள்ளாததால் தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் கோகிலாவுக்கு திருமுழுக்குக் கொடுக்க மறுத்துவிட்டார்.



### கர்னல் லிட்டில்டனின் மரணம்

இந்நிலையில் கர்னல். லிட்டில்டன் இங்கிலாந்து சென்று தனது ராணுவ சேவை ஒப்பந்தத்தை முடித்துவிட்டு இந்தியா திரும்பி வந்து முறைப்படி கோகிலாவை திருமணம் செய்வதற்கான ஏற்பாடுகளை செய்தவராக இங்கிலாந்து சென்றார் ஆனால் சூலை நோயின் காரணமாக லிட்டில்டன் இங்கிலாந்தில் மரணம் அடைந்தார் மரணம் அடைவதற்கு முன்பாக தனது அனைத்து சொத்துகளுக்கும் கோகிலாவை வாரிசாக நியமித்திருந்தார். இங்கிலாந்திலும் இந்தியாவிலும் அவருக்கு இருந்த சொத்துக்கள் கோகிலாவுக்கு கிடைத்தது.

### சுவார்ட்ஸ் ஐயரவர்களின் பாளை வருகையும் குளோரிந்தாவின் திருமுழுக்கும்

இந்நிலையில் திருமுழுக்குக் கொடுக்கும்படி பாளையங்கோட்டைக்கு தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் மீண்டும் வருகை தந்தார்கள். அந்த வேளையில் கர்னல். லிட்டில்டனின் மரணம் தமது இரட்சிப்பின் வாழ்க்கை ஆகியவற்றை சுவார்ட்ஸ் ஐயரவர்களிடம் கோகிலா எடுத்துச் சொல்லி தமக்கு திருமுழுக்கு கொடுக்க வேண்டினார். அப்போது அவருக்கு வயது 32. எந்த பெயரில் திருமுழுக்கு கொடுக்க வேண்டுமென ஐயரவர்கள் கேட்டபோது கிளாரிந்தா என அவர் கூறியதாகக் கூறப்படுகிறது குளோரிந்தா என்பதையே கிளாரிந்தா என அவர் உச்சரித்திருக்கலாமென கருதப்படுகிறது. கிளாரிந்தா என அவருக்கு ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. குளோரிந்தா என்றே அவர் அழைக்கப்பட்டார். அவர் ஞானஸ்நானம் பெற்ற நாள் 25. 02. 1778 என தந்தை பால் கடம்பவனம் அவர்களும் 03. 03. 1778 என கனம். கிறிஸ்துதாஸ் ஐயரவர்களும் குறிப்பிடுகின்றனர்.

### குளோரிந்தாவின் புதிய வாழ்க்கை

தற்போது குளோரிந்தா தேவாலயம் இருக்கும் இடத்தில் இருந்து சற்று வடக்கில் குளோரிந்தா வசித்து வந்த வீடு இருந்தது வீட்டின் அருகில் கிணறு இருந்தது குளோரிந்தா பிராமண சமூகத்தைச் சார்ந்தவராக இருந்தபடியால் பாப்பாத்தியம்மாள் என்றும் அவரது வீட்டின் கிணறு பாப்பாத்தியம்மாள் கிணறு என்றும் அழைக்கப்பட்டது. மேலும் குளோரிந்தா தஞ்சாவூர் ராஜ குடும்பத்தின் தலைமை புரோகிதரின் மகளாக இருந்தபடியால் ராணியம்மாள் என்றும் அழைக்கப்பட்டார். அவரது வீட்டில் சமையல் வேலைக்கு சாராள் என்ற

பணிப்பெண் இருந்தார் அந்த பணிப்பெண்ணின் மகன் ஹென்றி அது குளோரிந்தா அம்மையாரின் முதல் வளர்ப்பு குழந்தையானது. மேரி என்ற பெண். இரண்டாவது வளர்ப்பு குழந்தையானது.

தோட்ட வேலை செய்ய ஜோதி என்ற இளைஞன் அங்கு இருந்தார். அதே காலகட்டத்தில் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவத்திலிருந்து சீர்திருத்த கிறிஸ்தவத்துக்கு மாறியிருந்த திருநெல்வேலி சைவ வேளாளர் மரபைச் சார்ந்த தேவசகாயம், மாசில்லாமணி குடும்பத்தினர் விசுவாசத்தில் பின்வாங்கியிருந்தனர். குளோரிந்தா அம்மையாரிடம் நட்பு பாராட்டிய அவர்களை குளோரிந்தா ஆண்டவருக்குள் பலப்படுத்தினார். தேவசகாயம் அவர்களின் மகனே புகழ்பெற்ற வேதநாயகம் சாஸ்திரியார் அவர்கள்.

### சுற்றி வாழ்ந்த மக்களுடன் நல்லுறவு

திருநெல்வேலி மற்றும் பாளையங்கோட்டையில் வசித்து வந்த பிராமணர்கள், சைவ வேளாளர்கள் மற்றும் அனைத்து பிற்படுத்தப்பட்ட தாழ்த்தப்பட்ட சமூகத்தினர் அனைவரும் குளோரிந்தா அம்மையார் மீது மதிப்பும் கண்ணியமும் கொண்டிருந்ததோடு அம்மையாரிடம் சென்று கிறிஸ்தவ நற்சய்தியை கேட்டு வந்தார்கள். செல்வந்தரான குளோரிந்தா திருநெல்வேலி பாளையங்கோட்டையில் வசித்த மக்களுக்கு சாதி மத பாகுபாடு இன்றி நன்கு உதவிகள் செய்பவராக இருந்தார்.

### குளோரிந்தாவின் தொடக்க கால ஊழியங்கள்

1778 பிற்பகுதியில் சேரன்மகாதேவியில் அருகே வசித்து வந்த ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் இஸ்லாமியர்கள் இடையே மோதல் ஏற்பட்டு அது கலகமாக மாறியது. தென் தமிழ்நாட்டில் நற்செய்தி மற்றும் போதகப் பணியைச் செய்து வந்த இயேசு சபை 1773 இல் பிரான்சு, ஸ்பெயின், போர்த்துகல் அரசுகளின் நிர்ப்பந்தத்தால் இயேசு சபை கலைக்கப்பட்டதாக போப்பாண்டவர் 16 ஆம் கிளமெண்ட் அறிவித்தார். அதனால் மேய்ப்பன் இல்லாத ஆடுகளாக நின்ற சேரன்மகாதேவி ரோமன் கத்தோலிக்க



கிறிஸ்தவர்கள் தங்களுக்கு சீர்திருத்த கிறிஸ்தவ போதனையை தரும்படி குளோரிந்தா வீட்டிற்கு வருகை தந்தார்கள் அவர்களுக்கு நற்செய்தி அறிவிக்கப்பட்டது.

### கத்தோலிக்க கிறிஸ்தவர் மத்தியில் நற்செய்திப் பணி

1602 க்கும் 1609 க்கும் இடைப்பட்ட காலத்தில் பாளையங்கோட்டையில் கத்தோலிக்க திருச்சபை உருவானது. அந்த திருச்சபை படிப்படியாக வளர்ந்து குளோரிந்தாவின் காலத்தில் 50 குடும்பங்களாக காணப்பட்டது. இவர்களில் பெரும்பாலானோர் ஆதிதிராவிட கிறிஸ்தவர்கள் இவர்கள் குளோரிந்தா தங்கியிருந்த வீட்டிலிருந்து சற்று வடக்கே குடியிருந்தார்கள். இவர்கள் குளோரிந்தாவிடம் சீர்திருத்த கிறிஸ்தவ நற்செய்தியை கேட்டு வந்தனர்.

### அருள்திரு. பிலிப் ஐயரவர்களின் வருகை

அருள்திரு. பிலிப் ஐயரவர்கள் தரங்கம்பாடியில் இருந்து 1778 இறுதியில் புறப்பட்டு 1779 ஜனவரியில் பாளையங்கோட்டைக்கு வருகை தந்தார்கள். குளோரிந்தா வீட்டில் தங்கியிருந்து நற்செய்தி பணியாற்றினார்கள் குளோரிந்தா மூலம் உருவான திருச்சபையில் இந்துக்களும் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவர்களும் இருந்தனர். இவர்களின் இரட்சிப்பின் வாழ்வை கண்ட பிலிப் ஐயரவர்கள் அக்காலத்தில் தேவநன்மை என அழைக்கப்பட்ட திருவிருந்துக்கு அவர்களை ஆயத்தப்படுத்தும் வகையில் அதற்கான வகுப்புகளை நடத்த ஆரம்பித்தார்கள் பல வகுப்புகள் நடைபெற்றது அவர்களது ஆவிக்குரிய உயர்வை அந்த வகுப்பில் கண்ட அவர் ஒருநாளில் அனைவருக்கும் திடப்படுத்தல் நடத்தி திருவிருந்து பரிமாறினார். அக்காலத்தில் லுத்தரன் சபை ஒழுங்குகள் பின்பற்றப்பட்டன. பிலிப் ஐயரவர்கள் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் ஆக இருந்து சீர்திருத்த கிறிஸ்தவர்களாக மாறி இருந்த சேரன்மகாதேவி பூவாணி கிராமங்களுக்கு நேரில் சென்று அந்த சபைகளை கண்காணித்து வந்தார்.

### அருள்திரு. போஹ்ல் ஐயரவர்களின் வருகை

1778 இல் திருச்சி மிஷன் சபை நிர்வாகத்தின் கீழ் குளோரிந்தா அம்மையாரின் பாளையங்கோட்டை சபை இருந்ததால் திருச்சி தலைமை குருவாக பணி செய்த தந்தை சுவார்ட்ஸ் தஞ்சாவூரை தலைமையகமாகக் கொண்டு அங்கு தங்கியிருந்து பணி செய்யத் தொடங்கினார்கள் திருச்சி மிஷன் சபைகளுக்கான பொறுப்பை கனம். கிறிஸ்டியன் போஹ்ல் ஐயரவர்களிடம் ஒப்படைத்தார்கள்.

1779 ஜூன் மாதம் தென்பகுதி சபைகளைக் காண

போஹல் ஐயரவர்கள் ஜீன் 25 இல் பாளையங்கோட்டை வந்து சேர்ந்தார்கள். பாளையங்கோட்டையில் இருந்த கேப்டன் பாரிங்டனின் வீட்டில் தங்கி கேப்டனின் உதவியுடன் சபைகளை சந்தித்தார்கள் போஹல் ஐயரவர்களின் வருகை குளோரிந்தாவுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது. அவரது வீட்டில் தோட்டக்காரராயிருந்த ஜோதி திருமுழுக்குப் பெற விரும்பி போஹல் ஐயரவர்களை சந்தித்தார். ஜோதியின் கிறிஸ்தவ அறிவை சோதித்து அறிந்த ஐயரவர்கள் 29. 06. 1779 அன்று அவனுக்கு ஜான் என்ற பெயரில் திருமுழுக்குக் கொடுத்தார். 30. 06. 1779 அன்று குளோரிந்தாவின் வளர்ப்பு மகள் மேரிக்கும் அங்கு வீட்டில் தோட்டக்காரராயிருந்த ஜானுக்கும் திருமணம் கனம். போஹல் ஐயரவர்களால் நடத்தப்பட்டது.

### பாளையங்கோட்டை சபைடாப்பு - சபை பதிவேடு - 1780

1779 இல் கனம். போஹல் ஐயரவர்கள் வந்து சென்றபோது குளோரிந்தா காலத்து பாளையங்கோட்டை சீர்திருத்தத் திருச்சபையின் சபை டாப்பு எழுதத் தொடங்கப்பட்டது.

40 உறுப்பினர்களைக் கொண்ட 1780 இல் எழுதப்பட்ட பாளையங்கோட்டை சபை டாப்பு நமக்கு கிடைத்துள்ளது அதைப் பின்பற்றியே திருநெல்வேலி திருச்சபை உருவான ஆண்டு கணக்கீடு இன்றளவும் பின்பற்றப்படுகிறது.

### கனம். சத்தியநாதன் ஐயரவர்களின் பாளையங்கோட்டை வருகை

1785 டிசம்பரில் உபதேசியார் ஆக இருந்து பிற்காலத்தில் குருவானவர் ஆன சத்தியநாதன் தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களால் பாளையங்கோட்டைக்கு அனுப்பப்பட்டார். கோட்டைக்குள் ஆலயத்துக்கு அருகில் அவருக்கு வீடு ஒழுங்கு செய்யப்பட்டது. நவாப் ஆட்சியின் அந்த இறுதிக்காலத்தில் நவாப் ஆட்சியின் வரி வசூலிப்பவர்கள் ஆக இருந்த ஆங்கிலேயர்களுக்கும் பாளையக்காரர்களுக்கும் இடையே யுத்தங்கள் நடந்த குழப்பமான சூழ்நிலை தென் தமிழ்நாட்டில் காணப்பட்டது. குளோரிந்தா அம்மையாரின் தொடக்க காலத்தில் பூவாணி, பற்பநாதபுரம், மணப்பாடு பகுதிகளில் சபை உண்டாயிருந்தது. நாடார் சமூகத்தினர் வசித்த தேரிவிளை என்றொரு கிராமம் குளோரிந்தா அம்மையாருக்கு சொந்தமாய் இருந்தது அங்கு அவர் செய்த ஊழியத்தின் காரணமாக சில குடும்பத்தினர் கிறிஸ்தவராயினர் சபை உருவானது சபை பெரிய வளர்ச்சியை பெறவில்லை. நாடார் சமூகத்தினர் வசித்த உவச்சன்குளத்திலும் சபை உருவாகி இருந்தது காலப்போக்கில் இந்த இரு ஊர்களிலும் கிறிஸ்தவ குடும்பத்தினர் பின்வாங்கினர். ஆதலால் சீர்திருத்தக் கிறிஸ்தவத்தின் முதல் நாடார் கிராமம் என்ற பெயரை தேரிவிளை, உவச்சன்குளம் கிராமங்கள் இழந்தது. அந்த முதல் இடத்தை தாவீது சுந்தரானந்தத்தின் முதலூர் கிராமம் பிடித்துக்கொண்டது.

தஞ்சாவூருக்கு சென்ற அக்கால திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த காலன் குடியிருப்பை தந்தை ஊராகவும் விஜயராமபுரத்தை தாய் ஊராகவும் கொண்ட சின்னமுத்து கிறிஸ்தவ போதனைகளை பெற்று தஞ்சாவூரில் வைத்து தாவீது சுந்தரானந்தம் என்ற பெயரில் ஞானஸ்நானம் பெற்று தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களிடம் உபதேசியார் பயிற்சியைப் பெற்று வந்தார். 1797 இல் ஊழியர் சத்தியநாதனுக்கு உதவியாக உபதேசியார் தாவீது சுந்தரானந்தம் பாளையங்கோட்டைக்கு அனுப்பப்பட்டார். இந்நிலையில் தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்கள் 13. 02. 1798 இல் மரணமடைந்தார்கள்.

### குளோரிந்தா கண்ணால் கண்ட மாபெரும் ஊழிய அறுவடை

தந்தை சுவார்ட்ஸ் ஐயரவர்களுக்குப் பின் பாளையங்கோட்டை ஊழியங்களை மேற்பார்வையிட வந்த ஜெனிக்கே ஐயரவர்கள் கெரிக்கே ஐயரவர்கள் குளோரிந்தா அம்மையார் குறித்து எந்தக் குறிப்பையும் கொடுக்கவில்லை. 1801, 1802 ஆண்டுகளில் திருச்செந்தூர்,



உவரி, சாத்தான்குளம் வட்டார தேரிப்பகுதியில் கரைச்சுற்று கிராமங்கள் என்று சொல்லப்படும் 61 கிராமங்களில் சுமார் 5700 பேர் கிறிஸ்தவர் ஆயினர். இந்த மாபெரும் அறுவடையை நேரில் கண்ட குளோரிந்தா அம்மையார் மிகுந்த சந்தோஷம் அடைந்தார் இந்த சபைகளில் பல சபைகளை அவர் நேரில் கண்டு ஆண்டவருக்கு நன்றி செலுத்தினார். இந்த சபைகளில் முதலூருக்கு துன்பம்

ஏற்பட்ட காலத்தில் அங்கு நேரில் சென்று அவ்வூராரைத் தைரியப்படுத்தினார். இந்நிலையில் சத்தியநாதன் ஐயரவர்களுக்கும் ஊழிய எதிர்ப்புகளை முறியடிக்க தடிகம்பு சேனை எனும் சிலம்பு வீரர் குழுவை உருவாக்கிய தாவீது சுந்தரானந்தம் உபதேசியாருக்கும் இடையே கருத்து வேறுபாடுகள் ஏற்பட்டது. சத்தியநாதன் ஐயரவர்கள் திருநெல்வேலி ஊழியத்தை விட்டு விட்டு தஞ்சாவூருக்கு சென்றடைந்தார். இருதரப்பாருக்குமிடையேயான இந்த பிரச்சினையில் குளோரிந்தா அம்மையார் நடுநிலை வகித்ததால் இருதரப்பாரும் கொடுக்கிற குறிப்புகளில் அம்மையாரின் பெயர் இல்லை ஆதலால் 1802 க்குப் பின்



அம்மையார் குறித்து அறிய இயலவில்லை.

### குளோரிந்தா அம்மையாரின் மரணமும் மறுபக்கமும்

1804 - 1806 காலகட்டம் திருநெல்வேலி திருச்சபை வரலாற்றில் மிக இருண்ட காலம் இந்த காலகட்டத்தில் பாளையங்கோட்டையில் மிஷனரி சங்க குருவானவரோ, ராணுவ குருவானவரோ இல்லை இக்காலகட்ட செய்திகளை மிஷனுக்கு சொல்லுவதற்கு எவருமில்லை இந்த காலகட்டத்தில் தான் குளோரிந்தா அம்மையார் மரணம் அடைந்தார்கள்.

குளோரிந்தா அம்மையார் அவர்களது மரணம் குறித்து எந்த வரலாற்று ஆவணங்களிலும் குறிப்புகள் இல்லை. குளோரிந்தா அவர்கள் மாலை நேரத்தில் சிந்துபூந்துறை படித்துறையில் இருந்து வண்ணார்பேட்டை படித்துறை நோக்கி தாமிரபரணி ஆற்றைக் கடந்த பொழுது ஆற்றில் திடிரென அதிக நீர் வந்ததின் காரணமாக அமிழ்ந்து தண்ணீருக்குள் முங்கி முங்கி வந்த நிலையில் நள்ளிரவில் வண்ணார்பேட்டையில் தற்போது பேராத்து செல்வி அம்மன் கோவில் (பேராச்சியம்மன்) அமைந்திருக்கிற ஆற்றங்கரையோர படித்துறையில் பிணமாக கரை ஒதுங்கி கிடந்ததுள்ளார்கள் என்பதை திருநெல்வேலி பாளையங்கோட்டையில் உள்ள மக்கள் இன்றளவும் செவிவழிச் செய்தியாகக் கூறுகிறார்கள்.

குளோரிந்தா அம்மாள் ஆற்றங்கரையில் அடக்கம் செய்யப்பட்டார் என்றும், அவர்கள் ஏராளமானோருக்கு நன்மை செய்தவர்களானபடியால் பேராத்து செல்வி அம்மனாக / பேராத்து செல்வி அம்பாளாக திருநெல்வேலி மற்றும் பாளையங்கோட்டை நகர்பகுதிகள் மட்டுமல்லாமல் அவற்றின் சுற்றுக்கிராமங்களிலும் அனைத்து சமூகத்தவராலும் வழிபடப்படுகிறார்கள். இப்பெயர்களில் அமைக்கப்பட்ட கோவில்கள் திருநெல்வேலி மற்றும் சுற்றுக் கிராமங்களில் அதிகமாக உள்ளது.

காலப்போக்கில் இந்த வரலாறு மறைக்கப்பட்டு மறக்கப்பட்ட வரலாறாக மாறிவிட்டது. தாமிரபரணி ஆற்றின் வண்ணார்பேட்டை பேராத்து செல்வி அம்மன் கோவிலையொட்டியுள்ள படித்துறையில் குளோரிந்தா அம்மையாரின் சடலம் கண்டெடுக்கப்பட்ட இடத்தை அப்பகுதியில் குளிக்க வரும் பொது மக்கள் தொட்டு வணங்குகிற வழக்கம் இன்றளவும் காணப்படுகிறது.

**J. ஜான் ஞானராஜ்,**
**கல்லிடைக்குறிச்சி**

தமிழ் நாட்டின் தனிப்பெரும் நாவலாசிரியர்

அ மாதவையா அவர்களின்

# கிளாரிந்தா

தமிழ்நாட்டில் வெளி வந்த முதல் வரலாற்று நாவல்

தொடர் –11

**புகுந்த வீடு**

மணமானதும், இனி கிளாவிருந்தாபாய் தன் வேண்டாத உறவினரோடு தனியே வசிக்க அவசியமில்லை என்று திவான் அரசரிடம் சொல்லி விட்டார். தள்ளாத மாமிக்கு போதுமான சிறு தொகை ஆண்டுதோறும் கொடுப்பதாக ஏற்பாடு செய்து, அவளை அவளுடைய உறவினர் வீட்டுக்கு அனுப்பிவிட்டார்கள். ஹவில்தார்ஜியையும் போகச் சொல்லிவிட்டார்கள். கிளாவிருந்தாபாய் பணிப்பெண் சாரதாவைத் தன்னுடனேயே வைத்துக்கொள்ள விரும்பியதால் அவளும் மணப்பெண்ணுடன் புக்ககம் வந்தாள்.

திவானும் அவர் தம்பி வெங்கண்ணா பண்டிதரும் ஒரே வீதியில் அடுத்தடுத்து சேர்ந்துள்ள இரு வீடுகளில் வசித்து வந்தனர். இவர்கள் குடும்பம் தஞ்சையில் பழமை வாய்ந்த உயர் குடும்பமாகும். சகோதரர்கள் இருவரும் செல்வந்தர்கள் என்று பெயர் பெற்றிருந்தார்கள். அமாத்யாவுக்கு ஆணும் பெண்ணுமாய்ப் பல குழந்தைகள். மாதவராவ்தான் மூத்தவன். திவானுக்கு அவர் முதல் மனைவியின் மூலம் ஒரே பெண் குழந்தைதான்.

கல்யாண ஆரவாரம் எல்லாம் அடங்கி விருந்தினர் போய் விட்டபின், கிளாவிருந்தாபாய் தன் புக்ககத்தின் மனிதரைக் கவனிக்கத் தொடங்கினாள். இதுவரை டஜன் கணக்கில் அவளைச் சுற்றி தாராளமாக ஆராய்ந்தும் கேள்வியால் துளைத்தும், விமரிசனம் செய்தவர்கள் எல்லாம் யார் யார் என்று அவளுக்குச் சரிவரப் பிடிபடாமல் இருந்தது. முதலாவது அவளுடைய கணவர் திவான்; வீட்டுத் தலைவர் குடும்பத்தின் மற்ற ஒரே ஆண் உறுப்பினர், அவர் மருமகனான நரஹரிராவ். அவர் தன் மாமனாரின் அலுவலகத்திலேயே வேலையில் இருந்தார். அடுத்தபடியாக அவரது முதல் மனைவியின் விதவைத் தங்கை கமலாபாய். வீட்டின் உண்மையான தலைவி இவள் தான். திவானின் ஒரே மகள் கங்காபாய், நரஹரிராவின் மனைவி. குழந்தை இல்லை ஆஸ்த்மா நோயால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தாள். பிராமணப் பணியாட்கள் ஆண்கள் இருவரும் பெண்கள் இருவருமாக நான்கு பேர்கள். சூத்திர வேலையாட்கள் சாரதாவைச் சேர்த்து ஆறுபேர் இருந்தனர்.

கமலாபாய் குழந்தை இல்லாத இளம் விதவை. வயது சுமார் முப்பத்தைந்து இருக்கும். குட்டையாய் தடித்துக் கொழுத்துப்போய் இருந்தாள். பதினெட்டு வயதிலிருந்தே தன் அக்காள் வீட்டோடுதான் இருந்து வந்தாள். அக்காள் இறந்த பின்னரும் மைத்துனர் திவானின் வீட்டைக் கவனித்துக்கொண்டு அங்கேயே தங்கிவிட்டாள். தமக்கை வைதிகமும் மதவெறியும் கொண்டவள். அவள் உயிரோடிருந்த போது தங்கையை ஒரு விதவைக்குரிய கட்டுப்பாட்டோடு வைத்திருந்தாள். எல்லா விரதங்களையும் நோன்புகளையும் அனுசரிக்கச் செய்தாள். விருந்துகளில் கலந்துகொள்ள அனுமதிக்கமாட்டாள். கணவனோடு உடன்கட்டை ஏறாமல் போனாயே என்று கூடக் குற்றஞ் சொல்லுவாள்.

திவான் தன் தங்கையிடம் காட்டிய கவனத்தையும் உபசாரங்களையும் அவள் அறியாதவள் அல்ல. தங்கையும் அதற்கு உடன்பட்டவள் தான் என்ற சந்தேகமும் அவளுக்கு இருந்தது. இந்தக் காதல் விளையாட்டுக்களை நிறுத்தாவிட்டால் வீட்டை விட்டு விரட்டிவிடுவேன் என்று அவள் பயமுறுத்தியதும் உண்டு. ஆனால் அவள் இறந்ததும் எல்லாம் மாறிவிட்டது. கமலாபாய் திவானின் உள்ளத்துக்கும் இல்லத்துக்கும் ஒருங்கே அரசியாகிவிட்டாள். அவள் ஆட்டிவைத்த ஆட ஆரம்பித்தார் திவான். இதை அறிந்தவர்கள் திவான தயவு வேண்டியபோது அவள் மூலமாகக் காரியத்தை சாதித்துக் கொண்டார்கள். இதன் மூலம் தனக்கும் தனி வருமானம் கிடைக்கும்படி ஏற்பாடு செய்துகொண்டாள் அந்தத் தந்திரக்காரி.

திவானின் மகள் கங்காபாய் வயதிற் சிறியவள். தன் தாய் இறந்ததும் எஜமானி ஆகிவிடலாம் என்று முயற்சி செய்து பார்த்து கமலாபாயிடம் வெற்றிபெறாமல் அடங்கி விட்டவள். இப்பொழுது சித்திக்குத் தாளம் போடும் பக்கவாத்தியமாக மாறிவிட்டாள்.

அவள் கணவன் நரஹரிராவ் விவேகி. அமைதியாகப் போகக்கூடியவர். அவர் உத்தியோகம் மாமனாரைச் சார்ந்திருந்ததால் அவரும் கமலாபாயின் ஆதிக்கத்துக்குப் பணிய வேண்டிய தாயிற்று. எப்பொழுதுமே ஒதுங்கிப் போய்விடும் இயல்புடையவராதலால் வீட்டில் நடப்பனவற்றைக் கண்டும் காணாதவர்போல் இருந்து வந்தார். கமலாவோடு மோதல் ஏற்பட்டுவிடாமல் மட்டும் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டார். மற்றப்படி எல்லாம் இனிதே நடந்து வந்தது.

வேலையாட்களில் சாரதாவைத் தவிர, மற்றவர்கள் கமலா பாயின் அடி ஆட்களே. அப்படிப்பட்டவர்களைத் தேர்ந்தெடுத்தே அவள் வேலையில் சேர்த்திருந்தாள். சாரதா மாத்திரம் தன் எஜமானியைப்போல அந்த வீட்டில் அந்நியளாக இருந்தாள்.

வேலையாட்கள் பொதுவாக திவானை எஜமானர் என்றும் கமலாபாயை எஜமானி என்றும் சொல்லிவந்தார்கள். கங்காபாய் 'சின்ன எஜமானி.' அவளுடைய கணவர் 'மருமக எஜமான்.' புது மணப் பெண் வரவால் சற்றுக் குழப்பம் ஏற்பட்டது. ஆனால் விரைவில் அவளுக்குப் 'புது எஜமானி' என்று பெயர் வைத்து விட்டார்கள், கமலாபாய்க்கு இந்தப் பெயர் சில வேளைகளில் எரிச்சல் மூட்டியது.

ஒரு நாள் மாலை, கமலாபாய் பச்சை சரிகைப்பட்டு உடுத்தி கால்களைத் தொங்கவிட்ட வண்ணம் கூடத்தின் நடுவே தொங்கிய ஊஞ்சலில் உட்கார்ந்து தாழ்ந்த குரலில் பாடிக்கொண்டிருந்தாள். தங்கச் சங்கிலியால் கோர்த்த சாவிக்கொத்தும் அவள் இடுப்பிலிருந்து தாளம் போட்டுக் கொண்டு அவளோடு சேர்ந்து ஆடியது. கூடத்தின் ஓரத்தில் ஒரு கோரைப் பாயில் கங்காபாய் அமர்ந்து தன் முன்னால் இருந்த மாற்றாந்தாய்க்கு (கிளாவிருந்தாபாய்க்கு) தலைவாரிப் பின்னிவிட்டுக் கொண்டிருந்தாள்.

'அம்மா! நல்ல சுருள் சுருளான கூந்தல் உங்களுக்கு. சீப்பை எடுத்து விட்டால் மீண்டும் பட்டென்று சுருண்டு கொள்கிறது. அடர்த்தியாக வேறு இருக்கிறது. இதை எப்படித்தான் சீவிப் பின்னப் போகிறேனோ, தெரியவில்லை' என்றாள் கங்காபாய் புன்சிரிப்புடன், 'சுருட்டை முடிக்காரிகளே அடங்காப்பிடாரிகள் என்பார்கள், ஆனால் கிளாவிருந்தா அப்படிப் பிடிவாதக்காரியாக இருக்க மாட்டாளென்று நினைக்கிறேன்' என்றாள் கமலாபாய் குத்தலாக. அவளுடைய குத்தலான பேச்சு சுரீரென்றது கிளாவிருந்தாபாய்க்கு.

கங்காபாய், 'உங்களுக்குத் தெரியாது சித்தி! அம்மாவுக்கு இந்தக் கல்யாணத்தில் பிடித்தமேயில்லையாம். அதை நிறுத்துவதற்காக மகாராஜாவுக்கு கடிதம் எழுதி அழுது கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்களாம்.'

கமலாபாய், நம்ப இயலாதவள் போல் 'அப்படியா? அமங்கலமாக அல்லவா இருக்கிறது. மைத்துனருக்கு நாற்பத்தி ஏழு வயதாகிறது என்பது உண்மைதான். ஆனால் ஆண்பிள்ளைகளுக்கு வயது ஒரு பொருட்டா என்ன? பெண்கள் தான் அழகாகவும் இளமையாகவும் இருக்க வேண்டும். ஆண் எந்த வயசிலேயேயும் ஆண்தான். அதிலும் மைத்துனர் ராஜ்யத்திலேயே முதன்மையான ஆட்களில் ஒருவர். மனிதர்களுக்குள்ளே சிங்கம் அல்லவா அவர்? ஏன் இவளுக்கு அவரைப் பிடிக்கவில்லையாம்?' கிளாவிருந்தா சொன்னாள்: 'தாத்தா இறந்துபோய் ஒரு மாதம் தான் ஆகியிருந்தது. எனக்கு எல்லாமுமாக இருந்து வந்தவரே அவர் தானே. எனக்குப் பெற்றோர் உடன் பிறந்தோர் கிடையாது. நான் அவரை மிகவும் நேசித்தேன். அவர் திடீரென்று இறந்துவிட்டார். இறக்கும்போது நான் அவர் அருகில் இருக்கக்கூடக் கொடுத்து வைக்கவில்லை. துக்கம் தொண்டையை அடைத்தது. அவளால் அதற்கு மேல் பேசமுடியவில்லை.'

கமலாபாய் கோபமாக, 'எதற்காக அழுகிறாய், அசட்டுப் பெண்ணே ? புதுமணப் பெண் இப்படி அழுவது நல்ல சகுனம் அல்ல. உன் தாத்தா பெரிய கெட்டிக்காரர் தான். ஆனால் சாகாவரம் வாங்கிக் கொண்டு வந்தாரா என்ன? இருக்கிறவர்களுக்கு இடத்தைக் கொடுத்துவிட்டு எல்லாரும் ஒரு நாள் போக வேண்டியவர்தானே?' என்றாள். கிளாவிருந்தாபாய் கண்ணீரைத் துடைத்து சிரமத்துடன் துக்கத்தை அடக்கிக் கொண்டாள். 'நான் அவரை மிகவும் நேசித்தேன். அவர் போய் இவ்வளவு சீக்கிரத்துக்குள் மணம் செய்து கொள்ள விரும்பவில்லை. அது தான் . . .'

'அப்படியானால் கல்யாணத்தின் மேல் தான் உனக்கு ஆட்சேபம், என் மைத்துனர் மேல் அல்ல என்று சொல்லு, சமர்த்துத்தான், ஆனால் ஏற்கனவே நீ வயதானவள். பார்ப்பதற்கு பெரிய பெண்பிள்ளை மாதிரி இருக்கிறாய். எத்தனை நாள் தான் இப்படியே கல்யாணம் ஆகாமல் இருந்து விடலாம் என்று நினைத்தாய். நீ புஷ்பவதியாகி விட்டாய் என்று ஊரில் பேசினார்கள். நம்பலாம்போல தான் தோன்றிற்று. மைத்துனர் இப்படிப்பட்ட பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டது சாஸ்திர விரோதம் என்று எங்கள் உறவினர் சிலர் சொல்கிறார்கள்' என்றாள் கமலாபாய். கிளாவிருந்தாபாய் வெகுளியாக, 'அப்படியானால் எதற்காகக் கல்யாணம் செய்தார்? நான் பேசாமல் மாமியோடு வீட்டில் இருந்திருப்பேனே?' என்றாள்.

'எதுவரைக்கும் இருந்திருப்பாய்? வயத்திலே பிள்ளை வர்ற வரைக்குமா?' என்று சொல்லி இடி இடியென்று சிரித்தாள் கமலாபாய். பின் குறும்பாக 'பிராமணப் பெண் இத்தனை வயசுவரை கல்யாணம் ஆகாமல் இருந்து எங்கேயாவது பார்த்திருக்கிறோமா? மச்சினர் எப்படியோ மோகத்திலே மயங்கிவிட்டார் அல்லது வேறு யார் உன்னைக் கல்யாணம் பண்ணிக்கொள்வார்கள்?' என்றாள்.

கிளாவிருந்தாவுக்கு அவள் பேச்சு அருவருப்பைத் தந்தது. சற்றுக் காட்டமாகவே, 'நான் அப்படிப்பட்ட பெண் அல்ல, என்னை அப்படி வளர்க்கவும் இல்லை. பழைய காலத்தில் பிராமணப் பெண்கள் வயது வந்த பின் தான் மணம் செய்து கொண்டனர். பலர் மணமாகாமலேகூட இருந்தார்கள்' என்றாள்.

கமலாபாய் குத்தலாக, 'நீயும் கல்யாணமாகாமலே காலத்தைக் கழித்து விடலாம் என்று நினைத்திருந்தாயோ?' என கேட்டாள்.

முதலில், 'நான் அதைப்பற்றியெல்லாம் நினைத்ததே இல்லை' என்றாள் கிளாவிரிந்தா. பின்வெகுளியாக' குறைந்த பட்சம், கல்யாணம் செய்வதால் எனக்கு உபகாரம் செய்வதாக நினைக்காத ஒருவர் கிடைக்கும் வரையிலாவது, காத்துக் கொண்டிருக்கலாம்' என்றாள்.

கமலாபாய் இரைந்து சிரித்த வண்ணம் 'ஓஹோ இப்பொழுது தெரிகிறது உன் மனது. எங்க நந்தி மாதிரி வாட்டசாட்டமா அழகான இளைஞனாக இருந்தால் நீ உடன்பட்டிருப்பாய், இல்லையா? பாவம். மைத்துனர் மாட்டிக் கொண்டார்; எல்லாம் அந்த முட்டாள் கிழவன் செய்து விட்டுப் போன வேலை. வேண்டாத ஏட்டுப்படிப்பை எல்லாம் ஏற்றி உன் மண்டையை வீங்க வைத்து விட்டார்.. என்றாள். கிளாவிருந்தா கண்ணீரையும் கோபத்தையும் அடக்கமாட்டாதவளாக ஆத்திரத்துடன்' என் பாட்டனாரை யாரும் அவமரியாதையாகப் பேசவேண்டாம். அவர் பெரிய ஞானி, சாது. வாயில் வந்ததை எல்லாம் உளறும் நீங்கள் தான் அறிவில்லாதவர்கள். உங்கள்

சமாச்சாரம் எல்லாம் நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் பெயரை உச்சரிக்கக்கூட நீங்கள் அருகதை இல்லாதவர்கள்' என்று பொரிந்தாள்.

துயரமும் ஆத்திரமும் கலந்த இந்த எரிமலைச் சொற்கள், திடீர்க் குண்டாக விழுந்து வெடித்தன. கங்காபாய் ஆச்சரியத்தில் அசந்துபோய், பின்னிக்கொண்டிருந்த பின்னலை நழுவ விட்டுச் சுவரில் சாய்ந்து விட்டாள். சொல்லப்போனால் கிளாவிருந்தாவே மேற்கண்ட சொற்களைப் பேசியபோது தன்னையுமறியாமல் கூந்தலை இழுத்துக் கொண்டிருந்தாள். இந்த ஆத்திரச் சொற்களைக் காதில் கேட்ட இரு வேலையாட்கள், சமையலறையிலிருந்து வியப்பில் வாயைப் பிளந்த வண்ணம் அங்கு வந்து நின்றனர்.

கமலாபாயோ இம்மாதிரியான பேச்சை அவள் வாழ்நாளில் இதுவரை அவள் சகோதரியிடமிருந்து கூடக் கேட்டவள் அல்ல. இந்தத் திடீர் நேரிடைத் தாக்குதலால் ஸ்தம்பித்து.

நேரம் பேச்சிழந்தவளாய்ப் போய் விட்டாள். 'ஓஹோ! என் சமாச்சாரமெல்லாம் தெரியுமாக்கும் உனக்கு. எங்கிருந்தோ வந்த குப்பை பேசுகிற பேச்சைப் பார். மரியாதை தெரியாத மூடம். இருக்கட்டும். உன்னைக் கவனிக்கிற விதத்தில் கவனித்துக்கொள்கிறேன். என் மைத்துனர் மனைவியாச்சேன்னு நினைத்திருந்தேன். ஆனால் இனிமேல், நான் யார் என்பதை உனக்குத் தெரியும்படி செய்கிறேன். எதற்கு அருகதை என்பதையும் காட்டுகிறேன்.'

அவமானத்தாலும், ஆத்திரத்தாலும் குமுறிவந்த இந்தச் சொற்கள், அந்த வீட்டில் அன்று மணப்பெண்ணின் விதியை நிர்ணயித்தன.

### சிலந்தி வலை

திவான் உணர்ச்சி நயமற்றவர். சிற்றின்பப் பிரியர். சிற்றின்பத்தில் மூழ்கியதாலும் கமலாபாயின் சகவாச தோஷத்தாலும் அவரது மேலான தன்மைகள் மழுங்கி விட்டிருந்தன. களங்கமில்லாத அவரது இளம் மனைவிக்கு அவருடைய முரட்டுத்தனம் அதிர்ச்சி தருவதாய் இருந்தது. அவள் முதலில் கொண்டிருந்த அருவருப்புணர்ச்சி மேலும் அதிகரித்தது.

பெண்களை மயக்கும் வன்மை தமக்கு அதிகமாக உண்டு என்று திவான் பெருமைகொண்டிருந்தார். தாம் இன்னும் இளமை மாறாதவர் என்பதும் அவர் எண்ணம். இது கமலாபாய்க்கு நன்கு தெரியும். கிளாவிருந்தாவைப் பழிவாங்குவதற்காக, அவள் அதைப் பயன்படுத்தத் தொடங்கினாள். கிளாவிருந்தாவுக்கு அவர்மீது காதல் இல்லை, உண்டாக்கவும் முடியாது என்று மெள்ள மெள்ளக் குறிப்பாக உணர்த்தினாள். கிளாவிருந்தாவின் நடவடிக்கைகளில், அவ்வித அன்பில்லாததுபோல் தோன்றும் செயல்களைத் தந்திரமாக அவர் கவனிக்குமாறு செய்தாள். இருந்திருந்து கட்டிய மனைவியிடம் அவரது மயக்கும் சக்திகள் எல்லாம் தோற்றுப்போயினவே என்று சாடைமாடையாகவும் கிண்டலாகவும் சொல்லிக் காட்டினாள். அவரை ஆறுதல்படுத்துவதுபோல் பாவனையாகப் பேசி அவரைச் சீண்டிக் கோபமூட்டினாள். கிளாவிருந்தா அப்படி ஒன்றும் பிரமாத அழகி அல்லவென்று சொல்லி அவள் தோற்றத்தையும் நடையுடைபாவனைகளையும் நடு நடுவே குறைகூறி வந்தாள்.

அவளைப்பற்றி இல்லாததையும் பொல்லாததையும் நம்பக் கூடியவண்ணம் எடுத்துக் காட்டிச் சொன்னாள். வேலையாட்களின் உதவியாலும் கங்காபாயின் ஒத்துழைப்பாலும் அவைகளை நிரூபித்தும் காட்டினாள். ஒன்றுமறியாத அந்த எளிய பெண்ணுக்கு விரோதமாக அவர் மனம் கலையும் வகையில் அவள் பல காரியங்களைச் செய்து வந்தாள்.

சொல்லித்தர யாருமில்லாததால் அசடாக வளர்ந்துவிட்ட அனாதைப்பெண்ணை, தான் திருத்தி வழிக்குக் கொண்டுவருவதாகவும் கிளாவிருந்தாவின் நன்மைக்காகவே அப்படிச் செய்வதாகவும் வெளியில் சொல்லிக்கொள்வாள். தன் பெண்ணைப்போலவே அவளை நேசிப்பதாகவும், மைத்துனரின் மனைவியை ஓர் இலட்சிய இந்து மனைவியாக உருவாக்கப் பயிற்சி அளித்துவருவதாகவும் எல்லாரிடமும் பீற்றிக் கொள்வாள்.

பாசாங்கு கடினமான கலை. ஆழ்ந்த அன்பை மறைக்க முடியாததுபோலவே வெறுப்பை மறைப்பதும் கடினம். கிளாவிருந்தாவின் காரியங்களிலும், அவள் கணவன்மீதிருந்த வெறுப்பு ஓரளவு வெளிப்படவே செய்தது. ஆகையால் கமலாபாயின் வேலை மிக எளிதாகிவிட்டது. அவள் தூண்டுதலின் பேரில் இப்பொழுது திவான் கிளாவிருந்தாவைத் தண்டிக்கவும் தலைப்பட்டார். சிறு சிறு தவறுகளுக்கும் நிஜமோ, கற்பனையோ, அவர் அவளை ஏசவும் அவமானப்படுத்தவும் தொடங்கினார். வர வர அவளைக் கன்னத்தில் அடிப்பது, கிள்ளுவது, தலையில் குட்டுவது எல்லாம் சகஜமாகி விட்டது. அவருடைய முரட்டு வருடல்களையும், சரசங்களையும் எப்படியோ தாங்கி வந்தவளுக்கு இப்பொழுது அவர் அருகில் வந்தாலே நடுக்கம் உண்டாயிற்று.

கமலாபாயின் மனதை அறிந்து கொண்ட வேலையாட்கள் கிளாவிருந்தாவின் உத்தரவுகளையும் அலட்சியம் செய்தனர். அவள் தேவைகளைச் சரிவரக் கவனிப்பதில்லை. தன் அருமை பாயியிடம் அன்பும் விசுவாசமும் காட்டுவது சாரதாவுக்குக் கூட கடும் பிரயத்தனமாக இருந்தது. அவளுக்காக எத்தனையோ அவமானங்களையும் இன்னல்களையும் பொறுமையாகச் சகித்துக்கொண்டாள்.

கமலாபாயின் கேலிச்சொற்களும் கிண்டலும் கிளாவிருந்தாவின் மெல்லிய மனத்தை மிகவும் புண்படுத்துவனவாய் இருந்தன. ஆனால் எத்தகைய ஆத்திரமூட்டும் சந்தர்ப்பத்திலும், அவள் பொறுமையையும் பணிவையும் கைவிட்டு விடவில்லை.

தன்னைத் துன்புறுத்தியவர்கள் மீது பரிதாபமும் ஏளனமும் கொண்டவள் போல அவள் அமைதியாக இருப்பது, கமலாபாயின் எரிச்சலை அதிகப்படுத்தியது. இக்காரணத்தினால், கமலாபாய் வெற்றியடைந்தபோதிலும் அந்த வெற்றியின் மகத்துவம் குறைந்துவிட்டதுபோலிருந்தது அவளுக்கு. அவள் பகை மேலும் அதிகரித்து, பழிவாங்கும் எண்ணம் தீவிரமாகியது.

கிளாவிருந்தாவை முற்றிலுமாக முறியடிக்க இன்னொரு கடுமையான ஆயுதத்தைக் கையாண்டாள் அவள். மணமாகி இரண்டு வருடமாகியும் ஆண்குழந்தை பெற்றுக்கொடுக்கத் தவறிவிட்டாள் என்று குற்றம் சாட்டத் தொடங்கினாள். கிளாவிருந்தாவின் பெருஞ்செல்வம், திவானுக்கு ஆண்வாரிசு இல்லாதது, இந்த இரு காரணங்களுக்காகவும் தான் கமலாபாய் இந்தத் திருமணத்துக்குச் சம்மதம் தந்திருந்தாள். இப்பொழுது அதை

திவானிடம் நினைவுறுத்தினாள். செல்வம் என்னவோ வந்துவிட்டது. ஆனால் வாரிசு இல்லாவிட்டால் என்ன பயன்? ஏக்கத்தை அதிகரிக்கத்தான் அது பயன்படும். கிளாவிருந்தாவுக்கு கணவன் மீதுள்ள வெறுப்பினால் தான் இன்னும் சந்தானம் உண்டாகவில்லை என்றும் குற்றம் சாட்டினாள். நாள் கடந்துவிடுமுன்னர் வேறொரு மணம் செய்து கொள்ளுமாறும் திவானை வற்புறுத்தினாள். ஆனால் திவான் நல்லவேளையாக அந்த வலையில் விழவில்லை.

கிளாவிருந்தா இப்பொழுது இளம் பெண்ணாக வளர்ந்து அழகுறத் தோன்றினாள். சிற்றின்பப் பிரியரான தன் மைத்துனருக்கு இன்னும் அவள்மீது ஆசை இருந்தது என்பது கமலாபாய்க்குத் தெளிவாகியது. அவளுடைய பெருந்தன்மையையும், பொறுமையும்கண்டு அவர் மனம் இளகி இப்போது தெல்லாம் முன்னைப்போல் காரணமின்றி ஏசுவதும், தண்டியபதும் இல்லை.

இதைக்கண்டு திகிலுற்ற கமலாபாய் எப்படியேனும் அழிப்பது என்ற தீர்மானத்துக்கு வந்தவளாய் வேறொரு திட்டத்தை வகுத்தாள்.

பெண்களுக்கே உரிய சூட்சும அறிவால் அவள் ஒரு விஷயத்தை அறிந்திருந்தாள். அமாத்யாவின் மகன் மாதவராவ் கிளாவிருந்தாவைக் காதலிக்கிறான் என்பதுதான் அது. ஆனால் கிளாவிருந்தாவின் மனத்தைச் சந்தேகிக்க இடமில்லை. அது களங்கமற்றது என்பது அவளுக்குத் தெரியும்.

ஆனால் தன்னைப்போலவேதான் பிறரும் இருப்பார்கள் என்று நினைத்துவிட்டாள் அவள். இந்த முறையற்ற காதலை வளர்த்து, தகுந்த வளர்ச்சியடைந்ததும் மைத்துனரை வர வழைத்துக் காண்பித்து, எதிரியை ஒழிப்பது என்பது தான் அவள் புதிய திட்டம். மிகக் கொடிய திட்டம். ஆனால் கமலாபாய் கொடிய பெண்தானே!

மாதவராவ் தன் காதல் தவறானது என்று மட்டுமல்ல, நிறைவேறமுடியாததும்கூட என்பதை நன்கு உணர்ந்திருந்தான். அவன் தன் காதலை நசுக்கிவிடவே முயன்றான். பெரியப்பாவின் வீட்டுக்குப் போவதை நிறுத்திவிட்டான். அங்கே கிளாவிருந்தாவைச் சந்திப்பதைத் தவிர்க்கவே அவன் விரும்பினான். கிளாவிருந்தாவுக்கு அவன் தன்மீது ஆழ்ந்த காதல் கொண்டிருந்தான் என்பது தெரியாது. அவளுக்கு கணவன் மீது விசேஷமான அன்பு எதுவும் இல்லாவிட்டாலும், நாட்டுப் பண்பாட்டில் ஊறியவளாதலால், மனம் சொல் செயலால் கனவில் கூட அவருக்குத் துரோகம் இழைக்கக் கருதியதில்லை.

இரண்டு குடும்பங்களும் ஒன்றுக்கொன்று பொறாமையும் தாயாதிக்காய்ச்சலும் கொண்டிருந்தன. இரண்டு வீடுகளுக்கும் இடையே இருந்த பின்தோட்டத்துக் கதவு பொதுவாக அடைத்தே இருந்தது. விசேஷ காலங்களில் மாத்திரம் திறந்து வைத்து பரிமாறிக்கொள்வார்கள். ஆனால் கமலாபாய்க்கு இதெல்லாம் ஒரு தடையாக இல்லை. புதுப்புது யோசனைகளுக்குத்தான் அவளிடம் பஞ்சமில்லையே!

இந்த ஒன்றுமறியாத அனாதைப் பெண் எப்பொழுதும் சலமாக இருக்கிறளே என்று கிளாவிருந்தாமீது திடீரென்று கருணை சொரியத் தொடங்கினாள். வீட்டினர் அனைவரும் கமலாபாயைத் தொடர்ந்து அவளிடம் பிரியமும் பரிவும் காட்டினர். கிளாவிருந்தா கூரிய அறிவுடையவளாதலால் இது நல்லதற்கு அல்ல என்று மாத்திரம் உணர்ந்தாள். வில் வளைவது எதிரியைக் கொல்வதற்காகவே என்பதைத் தெரிந்து அவள், எதிரியின் திடீர்ப் பரிவை ஒதுக்கவுமில்லை, நம்பிவிடல்மில்லை.

கமலாபாய், வீட்டு எஜமானி என்ற முறையில் திவானின் தம்பி வீட்டாரோடு மீண்டும் உறவைத் தொடங்கிவைத்தாள். இருவீட்டினரும் வருவதும் போவதும் அதிகமாயின. தோட்டத்துக் கதவு பகல் முழுவதும் திறந்தே இருந்தது. இரவு படுக்கும் முன்னர் தான் அடைத்தார்கள். ஏதாவதொரு சாக்கை இட்டு கமலாபாய் அடிக்கடி கிளாவிருந்தாவைப் பக்கத்து வீட்டுக்கு அனுப்பிவைப்பாள்.

அவளது அடங்காத சுருள் கூந்தலை, அமாத்யாவின் மகள் ரமணிபாய் தான் சரியாகப் பின்னிவிடமுடியும். பூ, பழம் பண்டங்கள் அனுப்பவேண்டுமானாலும் கிளாவிருந்தாவையே கொண்டு கொடுக்கும்படி செய்தாள். கமலாபாய் விளையாட ரமணிபாயின் குழந்தையை அழைத்துவரவும் அதை விட்டு வரவும் கிளாவிருந்தாதான் அனுப்பப்பட்டாள். இப்படிப் போகுமாறு கமலாபாய் இயல்பான முறையில் நயமாகக் கேட்டுக்கொண்டதால் கிளாவிருந்தாவும் இணங்கவேண்டியதாயிற்று. அவள் எதுவும் சந்தேகிக்கவில்லை. ஆனால் கமலாபாயின் திடீர் கருணைக்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டும். அது தீமையானதாகத்தான் இருக்கும் என்று மாத்திரம் தோன்றியது. ஆனால் இன்னவென்று அவளால் ஊகிக்க இயலவில்லை .

இந்த நடவடிக்கைகளால் மாதவராவ் மிகுந்த வேதனைக் குள்ளானான். தினமும் நாலைந்து தடவைகள் கிளாவிருந்தா அவனுக்கு எதிர்ப்பட்டாள். முறைக்கு அவள் சிற்றன்னையாதலால் அவன் அவளைக் கண்டு விலகி ஒதுங்குவது சரியாகாது. அவளோ அவனிடம் தாராளமாகப் பேசுவாள். குற்ற உணர்வால் அவன் விலகிச் சென்றுவிடுவான்.

கமலாபாய், தன்னோடு பேசிக்கொண்டிருப்பதற்காக அடிக்கடி மாதவராவைத் தன் வீட்டுக்குக் கூப்பிட்டனுப்ப தொடங்கினாள். அவள் அவனை நந்தி என்றுதான் அழைத்தாள் அவளுக்கு இசையில் சிறிது ஈடுபாடு உண்டாதலால் அவனை அழைத்துப் பேசுவதற்கு அதுவே நல்ல சாக்காயிற்று.

அவள் அவனிடம் பல விஷயங்களைப் பற்றியும் பேச்சுக் கொடுப்பாள்; கிளாவிருந்தாவும் அடிக்கடி உடன் இருப்பாள். சில வேளைகளில் சிறு பெண்களை வயதான கணவர்களுக்கு மணம் செய்விக்கும் அநியாயத்தைப்பற்றிப் பேசத் தொடங்குவாள். மிகவும் உருகுவதுபோல் பாவனை செய்வாள். தந்தை, பாட்டனாருக்கொத்த வயதுள்ள கணவர்களுக்கு வாழ்க்கைப்பட்டு இன்னல்படும் பெண்களைப்பற்றி விவரிப்பாள். அந்த பெண்கள் எல்லாம் எப்படித்தான் திருட்டுத்தனமாக வேறு இளம் காதலர்களை தேடிக்கொள்ளாமல் இருக்கிறார்களோ என்று அதிசயிப்பாள். சந்நியாசி கிளாவிருந்தாவை மாதவராவுக்குக் கொடுத்திருந்தால் அது எப்படிப்பட்ட இலட்சிய ஜோடியாக இருந்திருக்கும் என்று அங்கலாய்ப்பாள்.

**தொடரும் ...**

## சேலம் கிறிஸ்தவ திருச்சபைகளின் வளர்ச்சியில்

# இந்திய பெண்களின் பங்கு

**முன்னுரை:**

தமிழக வரலாற்றில் குறிப்பாக சேலம் வரலாற்றில் சமூகப்பணிகளில், திருச்சபைகளின் வளர்ச்சிப் பணிகளில், மிஷனெரி பணிகளில், இந்தியப் பெண்களின் பங்கும், பங்களிப்பும், மகத்தானது மட்டுமல்ல, முன்னோடியானதும் ஆகும். இவர்கள் சாமான்ய விசுவாசிகள்; தலைமையேற்க வந்தவர்கள் இல்லை, உயர்ச்சியை அடைய விழைந்தவர்களும் அல்ல, மாறாக இவைகளை எளியவர்கள் அடைய வழிகாட்டியவர்கள். இந்த முயற்சியில் அவர்கள் தங்கள் உயிரைக்கூட பாதுகாத்துக் கொள்ள ஓடி ஒளியவில்லை. அனைத்தையும் தனிமனித மீட்பு மற்றும் ஆறுதல், குடும்பங்களின் அமைதி மற்றும் ஒற்றுமை, திருச்சபை வளர்ச்சி, சமுதாய முன்னேற்றம், கல்வி, சமாதானம், என்று முன்னேறிச் சென்றவர்கள். அவர்கள் ஆண்டவரையும், அவரது அப்போஸ்தலர்களையும், எல்லா இடங்களிலும் பிரதிபலித்தார்கள். இவர்களால் நாம் தப்பிப் பிழைத்தோம், வாழ்ந்து சிறந்தோம், இன்று தன்மானமுள்ள ஒரு சமுதாயமாக கல்வி, கலாச்சாரம், பண்பாடு, மரபுகளில் உயர்ந்து நிற்கிறோம். நமது எதிர்காலத்திற்காகவே அவர்கள் தங்கள் காலத்தை, நேரத்தை, அர்ப்பணித்தார்கள். இன்று மறக்கப்பட்டுப்போன இவர்களை மறக்காமல் நினைவுகூர கடமைபட்டுள்ளோம். திருச்சபைகளாக நாம் கடந்துவந்த பாதைகளை திரும்பிப்பார்ப்போம். இந்த சாதனை சாமான்யர்களை சரித்திரத்தின் ஓரங்களில் அடையாளம் கண்டு பிடிப்போம், பகிர்வோம்.

**யார் இந்த சேவைகளின் தாய் ?**

அந்த காலத்தில் இந்திய கிறிஸ்தவப் பெண்களில் சிலர் அப்போஸ்தலர்களைப் போன்றே சிறப்பான சேவைகளைச் செய்து வரலாற்றில் இடம் பிடித்திருக்கிறார்கள். 1740 களில் நடந்திருந்த இந்த சேவைகளின் தாயைப் பற்றிய நடபடிகளை சேலம் மேற்றிராசன சரித்திரச் சுருக்கத்தில் சங்கை M. S. ஜோசப் அடிகள் எழுதி வைத்த அதே வரிகளில் இங்கே உங்கள் வாசிப்பிற்கு அப்படியே தருகிறேன்: 'அக்காலத்தில் பெண்களில் சிலர் அப்போஸ்தலிக்குச்சேவை செய்திருக்கிறார்கள். அதற்குச் சான்றாக காக்காவேரியில் (இன்று நாமக்கல் மாவட்டம் இராசிபுரம் வட்டத்திலுள்ள ஊராட்சி) ஒரு பெண் தனது கணவனாலும், உறவினர்களாலும், மிகுந்த இன்னல்களை அனுபவித்து, பிச்சைக்காரியாக காக்காவேரி தேவாலயத்திற்கு அருகே வசித்துவந்தாள். அவள் ஞானோபதேசம் கற்றுக்கொடுப்பாள்; நோயாளிகளைச் சந்தித்து ஜெபித்து ஆறுதல் கூறுவாள்; புது கிறிஸ்தவர்களுக்கு உற்சாகமூட்டுவாள்; விசுவாசத்தை இழந்த கெட்டக் கிறிஸ்தவர்களை மனம் திருப்பிப் புண்ணிய பாதையில் நடக்கச் செய்வாள்.'இப்படியாக தனது பரிதாப நிலையிலும் சமூகப் பணியில் உற்சாகமாக ஈடுபட்ட அந்தப் பெண் இங்கே கிறிஸ்தவ தாய்க் குலத்தின் சாட்சியான முன்னோடியாக குறிப்பிடப்படுகிறாள்.

**சேலம் பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடியான தமிழ் பெண்:**

1829 ஆம் ஆண்டு அன்றைய சேலம் நகரில் பெண்களுக்கான முதல் பள்ளிக்கூடத்தை திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையார் துவக்கி நடத்திய அந்த பெண்கள் பள்ளியில் பெயர் அறியப்படாத ஒரு தமிழ் பெண் ஒருத்தி ஆசிரியையாக பணிசெய்ய சித்தூரிலிருந்து அழைத்து வரப்பட்டு இங்கே பணியேற்ற ஐந்தே நாட்களில் கொல்லும் கொடிய காலரா நோய்தாக்கி உயிர்நீத்து பெண்கல்வி முயற்சிகளின் முதல் களப்பலி ஆனார். ('A Girls school was commenced in 1829 but there was no educated indian women in Salem so the teacher had to be brought down from Chittor, 200 miles away, but she died of cholera after 5 days of service." - Men Report Salem - 1927 - Rev. W. J. Hatch) இவளைத் தொடர்ந்து திருமதி. எலிசா ஸ்டெப்பி அம்மையாரும் சேலம் வெப்பம் ஒத்துக் கொள்ளாமல் தனது இரண்டாவது பிள்ளைப் பேற்றில் நோய்வாய்ப்பட்டு மரணமடைந்தார். பெண்கல்வி முயற்சிகளின் முன்னோடிகளாக உருவான இந்த இரண்டு பெண்மணிகளும் பெண்கல்வி என்ற விடுதலைப் புரட்சியின் அதிகாலை



நட்சத்திரங்கள்.

**பொள்ளாச்சி அம்மாள் :**

திருமதி. ஹன்னா கனகராயன் அம்மையார் சேலத்துச் செம்மல் K. T. பால் அவர்களின் பாட்டியார் ஆவார். இவர் அப்பொழுது சேலத்தில் 1882 ஆம் ஆண்டு ஏற்பட்ட இந்து- முஸ்லீம் கலவரத்தில் (Salem Riots - 1882 ) சமாதான தூதுவராக செயலாற்றி, கலவரத்தில் பாதிக்கப்பட்ட இருதரப்பு மக்களையும் சந்தித்து சமாதானம் செய்து காயங்களை ஆற்றும் ஒன்றிணைக்கும் ஒப்பற்ற பணியை செய்த வீரப்பெண்மணியாக திகழ்ந்தார். கலவரத்திற்கு பின்பு நிலையான அமைதி ஏற்பட மிகவும் முயற்சி எடுத்த இவரை சேலம் மக்கள் 'பொள்ளாச்சி அம்மாள்' என்று அன்புடன் அழைத்தனர்.

'சமாதானம் பண்ணுகிறவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனுடைய புத்திரர் என்னப்படுவார்கள்.' - மத்தேயு 5:9.

**பொன்னம்மாள் சந்நியாசினி :**

இன்று இவரது எழுப்புதல் பாடல்களை விரும்பிப் பாடாதவர்களே இல்லை என்று சொல்லலாம். தமிழகத்தின் மூலைமுடுக்கலெல்லாம் இவரது பாடல்கள் பாடப்படுவதை இன்று நாம் கேட்க முடியும். தமிழ் கிறிஸ்தவ சமுதாய மக்கள் மட்டுமல்லாது அனைத்து தரப்பு மக்களின் சோர்ந்துபோன உள்ளங்களுக்கும் அவைகள் அனல் மூட்டும் கீதங்கள். 'இயேசு என்ற திருநாமத்திற்கு எப்போதுமே மிக ஸ்தோத்திரம்' என்ற பாடல் மதுரைப்குதிகளில் தொடங்கி தமிழகமெங்கும் பிரபலமடைந்தது. 'எங்கே தேடுவேன் நான் எங்கே தேடுவேன் - என் நேசர் இயேசுவை நான் எங்கே தேடுவேன்!' என்ற பாடல் சிறப்பானது. 'அழகு வாய்ந்தவர் நேசர் அன்பு மிகுந்தவர் - அறிவு மிகுந்தவர் நேசர் அனைத்தும் அறிபவர்!' என்ற பாடலும் உள்ளத்தை கவரும் வல்லமை படைத்தது. அதேபோல 'இயேசுவைப் போல் அழகுள்ளோர் யாரையும் - இப்பூவினில் இதுவரை கண்டதில்லை காண்பதும் இல்லை!' என்ற பாடலும் மிகவும் பிரபலமானது. இப்படிப்பட்ட விழுது பாடல்களைத் தந்த பொன்னம்மாள் சந்நியாசினி தமிழக மெங்கும் ஊர் ஊராகச் சென்று தேவாலயங்கள் தோறும், வெட்ட வெளி மைதானங்களிலும் நற்செய்திக் கூட்டங்களை நடத்தி அநேகரை இயேசுவண்டை கூட்டிச் சேர்த்தார். அவரது சூறாவளி பிரசங்க பயணங்கள் இந்தியாவிலும், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், என்று ஐரோப்பாவிலும் தடம் பதித்தது. 1924ஆம் ஆண்டு தனது ஊழியத்தை தொடங்கிய பொன்னம்மாள் 1934ல் இந்திய நற்செய்தி குழு "Indian Gospel Team "ஐ ஆரம்பித்து நடத்தினார்கள். சேலம் பகுதியிலுள்ள அனைத்து சீர்திருத்த தேவாலய சபைகளிலும் அம்மையார் பாடல் பிரசங்கம் நடத்தியிருக்கிறார்கள். எனது அம்மாவைப் பெற்ற தாத்தாவும், பாட்டியும், எனது அப்பாவும், இவரது அனல் மூட்டும் பாடல்களாலும் உயிர் மீட்சி பிரசங்கங்களாலும் கவர்ந்திழுக்கப்பட்டிருக்கிறார்கள். 1997 ஆம் ஆண்டில் அம்மையார் 90 வயதை தொட்ட நிலையில் ஏறத்தாழ 70 ஆண்டுகால சூறாவளி ஊழியத்தை நடத்திய பெருமைமிகு பெண்மணியாகத் திகழ்ந்தார்கள்.

**செல்வி எமிலி வேதநாயகம் (1919-1996):**

ஆசிரியையாக தனது வாழ்கையை ஆரம்பித்த செல்வி எமிலி வேதநாயகம் சுதேச மிஷனெரி சங்க (National Missionary Society of India)முதல் பெண் மிஷனெரியாக வட இந்திய பகுதிகளுக்கு



அனுப்பப்பட்டவர். பல்வேறு கஷ்டமான மற்றும் ஆபத்தான சூழ்நிலைகளில் ஊழியத்தை துணிவுடன் செய்த தமிழ்ப்பெண் நற்செய்திப் பணியாளர். இவர் பல தனிநபர்கள், மற்றும் அநேக குடும்பங்களை கிறிஸ்துவின் மீட்பிற்குள் கொண்டுவந்தவர். ஒரு நூலாசிரியராகவும் விளங்கிய இவர் கிறிஸ்தவ வாழ்க்கை, வட இந்தியாவிலுள்ள தமிழ் கிறிஸ்தவர்கள் என்ற இரண்டு நூல்களை எழுதியுள்ளார். செல்வி எமிலி வேதநாயகம் இந்திய சபைகளின் கோதுமை மணியாகத் திகழ்ந்தார்.

**முடிவுரை :**

இங்கே வரலாற்றின் பக்கங்களில் பல்வேறு காரணங்களால் உரிய இடம் தரப்படாமல் மறைக்கப்பட்ட கிறிஸ்தவ தாய்மையின் முகங்களை இங்கே இந்த கட்டுரையில் சுட்டிக்காட்டியிருக்கிறேன். முக்கியமாக வரலாற்றிலும், பிரபலத்திலும் நிறைந்து நின்றவர்களைவிட பெரிதும் அறியப்படாமல் இருந்தும் சிறப்பான காரியங்களை தங்கள் வாழ்நாள் சாதனைகளாக சாதித்த சாமான்ய பெண்மணிகளை சேலம் வரலாற்றிலும் தமிழக வரலாற்றிலும் தேடி முன்னிலைப்படுத்தி பதிவும் பகிர்வும் செய்திருக்கிறேன். சிறியதானதோ, பெரியதானதோ, தான் கையிலெடுத்த பணிகளை நிறைவுடன் செய்து தங்கள் கல்லறைகளில் இளைப்பாறும் இவர்கள் சேலம் கிறிஸ்தவ வரலாற்றிலும், தமிழக கிறிஸ்தவ வரலாற்றிலும், அழகாக நிற்பவர்கள். சேலம் மற்றும் தமிழக சமுகப்பணிகளிலும், கிறிஸ்துவின் வழிகளிலும், தங்கள் பொன்னான நேரங்களையும், உழைப்பு, வியர்வை, இரத்தம், மற்றும் உடல், பொருள், ஆவி, அனைத்தையும் அர்ப்பணித்த இந்த எளியவர்களுக்கு நாம் என்ன கைமாறு செய்யப்போகிறோம்?

**ஜே. பர்னபாஸ்,**

**சேலம் வரலாற்றுச் சங்கம், சேலம்**

வேதாகமத் தாய்

# பூஷணம் இலாசரசு



இன்றைய வேலூர்ப் பேராயம் (RCA) மிஷனரிகளால் 1853இல் ஆற்காட்டில் துவங்கி ஆரணியில் ஆலயமும் பள்ளியும் விடுதியும் தொடங்கினர். 1860இல் இராஜா தேசிங்கு கோட்டை கொண்ட செஞ்சியில் ஆலயமும் பள்ளியும் தொடங்கப்பட்டது. ஏரியின் அடுத்த கரையமை பொன்பத்தியில் திரு. Z. டேவிட் என்பவர் (என் தாத்தா) ஆரணியிலும் வேலூரிலும் பயின்று ஆசிரியரானார். மூன்றாண்டு இறையியல் கற்று 4ஆம் வகுப்பு படித்த அம்மணியம்மாவை மணந்து, இப்பேராயத்தின் தென் வட்டாரத்தில் ஆசிரியராயும் உயருபதேசியாராயும் 50 வருடங்கள் பணியாற்றியவர். சிங்கப்பூர், மலேசியா, பர்மா சென்று நிதி திரட்டி இன்றைய செஞ்சி, ஆலம்பூண்டி, நாகாந்தூர் கிராமங்களில் தேக்கு மரத்தாலான ஆலயங்கள் கட்டினார். 9 பிள்ளைகளில் 3வது எனது தாய் பூஷணம் இலாசரஸ் 28.7.1908இல் பிறந்தார்.

180 கி.மீ. தொலைவிலுள்ள சித்தூர் ஷெர்மன் மகளிர் பள்ளி விடுதியில் 8ஆம் வகுப்பு படித்தபோதே 17ஆம் வயதில் தந்தையின் கட்டாய திருமணத்தை ஏற்றார். தந்தை கிறிஸ்தவராக்கி கற்பித்த 8 பேரில் ஒருவரான நாகாந்தூர் தலைவர் சினன் குமாரன் இலாசரஸ் மணந்தார். முதல் பிள்ளை பெற்ற பின் மீண்டும் சித்தூர் சென்று ஆசிரிய பயிற்சியுடன் கணவருடன் 1927-1930 வரை இறையியல் பயின்று பல கிராம சபையில் கல்வி திருச்சபைப் பணி; பெண்கள் ஊழியம், கிராம நலம், சுகாதார ஜெப ஊழியராக பணியாற்றினார்.

**திருப்பணி**

இரு எசமானர்க்கு பணி செய்யவியலாதென தாமே ஆசிரியைப் பணியை துறந்து முழுநேர சுவிசேஷியாக வேதாகம பெண்ணூழியராக முட்டத்தூரில் கன்னியாய் பணியாற்றிய ஸ்கடர் குடும்ப சி.சி. ஒய்காப் அவர்களுடன் சேர்ந்து செஞ்சி, நாகந்தூர், ஆலம்பூண்டி, புதுபாளையம், கலிந்தம்பட்டு, புதுபாளையம், பொப்பேரி, கூட்டேரிப்பட்டு, அரசலாபுரம், தேமூர், கோழிப்பட்டு, மண்டகப்பட்டு, கொலப்பாக்கம், நரசிங்கனூர் கோழிப்பண்ணை, பூதூர், கஞ்சனூர், பூண்டி, குண்டலிபுலியூர், கொலூர், பூரிகுடிசை, ஈச்சம்பட்டு, வரிக்கல், மாத்தூர், முட்டத்தூர், ஒட்டம்பட்டு, அனந்தபுரம், கலியாணம் பூண்டி என பல கிராமங்களில் நடந்தே படசுருள், பாட்டு, திருமறை, கைகுகை, கைவிளக்குடன் சென்று 9 பிள்ளைகள் கணவரை விட்டு தனித்தாளாக ஊழியம் செய்தார்கள். இரவில் நடந்ததால் இரவு 10 மணிக்கு எண்ணெய் விளக்குடன் வீடு திரும்புவார். வருடந்தோறும் வேதபாட தேர்வில் தானும் தன் சபையும் முதற்பரிசு பெறுதல் மிகச் சிறப்பாகும்.

**ஊழியச் சிறப்பு**

பண்டிகைக் காலங்களில் குடும்பத்தை விட்டு தனியே சென்று அவர்களே தொடங்கிய சபைகளில் குழுக்களில் வழிபாடுகள் நடத்தினார். விடுதி விடுமுறையில் வந்துள்ள எங்களுக்கு பலகாரம் சிறப்புணவு கிடைக்காவிடினும் தம் திருப்பணியையே திருப்தியாய் செய்பவர்.

**ஊழியத்தில் தாழ்மை**

நேமூர் எனும் பெரிய கிராமத்தின் வழியே செல்ல தம் காலணியை ஒரு கையிலும் மறுகையில் ஊழியப் பொருள்களும் எடுத்துச்செல்வதை கண்ட வசதியான ரெட்டியார்கள் கண்டு என் தாயாரை பணிந்து காலிலேயே அணிந்து செல்லுங்கள் என்று வேண்டியதை எங்களிடம் கூறியமுதார்கள்.

**ஊழியத்தின் வலிமை**

பிணி, வறுமை, சிக்கல், சண்டை, துன்பம், துயரம், மரண சூழ்நிலைகளில் சர்வ நிவாரணியாகிய ஜெபமே ஜெயமென ஜெபிப்பார்கள். இதுவே அவர்களின் ஊழிய சின்னமாயிற்று.

**ஊழியத்தின் அற்புதம்**

அம்மாவின் ஜெபத்தினால் பலர், பிணி துயரங்கள், கர்ப்பத் தடை நீங்கியவர் இயேசு! கஞ்சனூர் எனும் கிராமத்தில் 1950 வரையில் கிறிஸ்தவமில்லை. சபை, பள்ளி, ஆலயம், ஊழியர் ஏதுமில்லை. என் பெற்றோர் ஊழியத்தால் இன்று 40 குடும்பங்கள் இரு ஆலயங்கள். இவ்விடத்திலேயே இறுதிவரை இருவரும் தங்கி வாழ்ந்தனர். இச்சபையின் குடும்பங்கள் பல இடங்களில் சிறப்புடன் வாழ்கின்றனர். சிலர் பள்ளிக் கல்லூரிகளில் பெரும் தலைவர்களாகவும், மற்றும் பல சிறப்புப் பணியிலும் விளங்குகின்றனர். பேய் பிசாசுகளும் என் பெற்றோர்க்கு கீழ்ப்படியச் செய்த யேசுவுக்கே நன்றியும் புகழும் ஆகுக!

**ஊழியத்தின் மேன்மை**

14 வருட ஆசிரியப் பணிக்கும் ஓய்வூதியம் உண்டெனும் புதுவிதியால் என் தாய்க்கும் 30 வருடங்களுக்குப் பின் கிடைக்க தொடங்கியது. கணவரின் ஓய்வூதியம் சேர்த்து கிடைத்தது. தந்தை வருமானத்தில் வறுமையில் வாழ்ந்து குறைவில் 9 பிள்ளைகளை வளர்த்த தாய்க்கு செல்வ நிலை கிடைத்தது. பிள்ளைகளும் திருமணமாகி பலர் பல பணிகளில் சம்பாதித்தனர். 9 பிள்ளைகளின் குடும்பங்களை சுழன்று பார்வையிட்டு வம்சத்தின் 119 பேர்களுக்கு ஜெபித்தாசீர்வதித்த தாய் 12.7.1993இல் உயிர்த்தெழுதலுக்கென உறங்குகிறார் கணவரருகில், குடும்ப கல்லறையில் நம் வேதாகம தாய்.

**ஊழிய சிறப்பு**

அமெரிக்காவில் மிச்சிகனில் ஓர் ஞாயிறு பள்ளி வகுப்பறையில் அம்மாவின் உருவபடம் இன்றும் உள்ளது இவர்களின் புகழாகுமாம்.

**அருள்திரு. இலாசரஸ் செல்வநாதன்**



# நிலத்தில் விழுந்த கோதுமை மணி

நெல்லைத் திருச்சபையின் ஆரம்பமே ஒரு பெண்ணின் ஜீவியத்தில் அமைந்துள்ளது என்பதில் பெருமைப்படுகிறோம். திருச்சபையின் வளர்ச்சிக்குப் பெண்களே முதுகெலும்பு என்பதில் பெருமிதம் அடைகிறோம். ஆனால் ஒரு பெண்ணின் மரணம் (இரத்தம்) ஒரு திருச்சபையின் வித்தாக மாற்றம் பெற்றிருப்பதை நினைக்கையில் உடலெல்லாம் சிலிர்க்கிறது. உள்ளமெல்லாம் பூரிக்கிறது. உலகம் அறிய வேண்டும் என்ற அவா எழும்புகிறது. இவ்வரலாறு இன்றைக்கும் பொருந்தாதோ? இங்கே ஓர் அறைகூவல்!

ஸ்ரீவைகுண்டம் நகருக்கு கிழக்கே சுமார் 4கி.மீ தொலைவில் வயல்களுக்கிடையே அமைந்துள்ளது திருப்புளியங்குடி என்னும் சிற்றூர். அக்கிராமத்தின் மேற்குப் பகுதியில் அவ்வூரைச் சேர்ந்த பட்சேரி உள்ளது. அதில் வாழ்ந்த சாதாரண குடும்பம்தான் நம்பியின் குடும்பம். அவர் மனைவி நம்பியம்மாள் என்றே அழைக்கப்படுகிறாள். அவருக்கு மூன்று ஆண்பிள்ளைகள், மூத்த மகன் பெரியபலவேசம், அடுத்த மகன் சின்னபலவேசம் என்றும் இளையமகன் சுப்பிரமணியன் என்றும் அழைக்கப்படுகிறார்கள். நம்பியின் குடும்பத்தொழில் விவசாயமாகும். நம்பியின் மூன்று பிள்ளைகளும் பெற்றோரிடம் அன்பும், கீழ்ப்படிதலும் உள்ளவர்களாய், பலசாலிகளாய் தன் தந்தை, தாய்க்கு உதவியாகப் பயிர்த்தொழிலையே செய்து வந்தனர். தொழிலில் கொடுக்கல் வாங்கல், நிலுவைபிரித்தல் முதலிய காரியங்களினிமித்தம் பல ஊர்களுக்குச் செல்வது உண்டு.

ஒரு நாள் சுப்பிரமணியன் தொழில் விஷயமாய் தாமிரபரணி நதிக்குத் தெற்கிலுள்ள கிராமத்திற்குச் செல்லும் பொழுது, அங்கே ஒரு தெருசந்தியில் ஒரு பிரசங்கியாரும் அவரது மகன் இயேசுவடியானும் இயேசுவைப்பற்றிக் கூறிக் கொண்டிருந்தார்கள். இயேசுவடியான் 115ம் சங்கீதம் வாசித்துக் கொண்டிருந்தான். அதில் புறஜாதிகளுடைய தெய்வங்கள் விக்கிரகங்கள் அவையாவும் மனுஷர் கைவேலையாயிருக்கிறது. அவைகள் செயலற்றவை, அவைகளை நம்புகிறவர்களும் அப்படியே இருக்கிறார்கள். எனவே, இஸ்ரவேலே கர்த்தரை நம்பு என்று கூறப்பட்டது. அதன் பிறகு

பிரசங்கியார் (இயேசுவடியானின் தந்தை) அவ்வார்த்தைகளுக்கு விளக்கம் கூறி, அப்படிப்பட்ட தெய்வங்கள் பற்றி ஏளனமாய்ப் பேசி உண்மைத் தெய்வமாகிய இயேசுவின் அன்பை சிலுவைக் காட்சி மூலம் விவரித்தார். இதைக் கேட்டுக் கொண்டிருந்த சுப்பிரமணியன் முதலில் கோபமடைந்தான். ஆனாலும் பிறகு தன் இருதயத்தில் குத்தப்பட்டவனாய் பிரசங்கியார் கொடுத்த நான்கு சுவிஷேங்கள் அடங்கிய புத்தகத்தை வாங்கிக் கொண்டு தன்வேலைகளை முடித்து திருப்புளியங்குடி திரும்பினான்.

வீடு திரும்பிய சுப்பிரமணியன் தன் இருதயத்தில் சிந்தித்து பாவ உணர்வடைந்தான். ஆனால் பாவநிவிர்த்தி செய்ய நம் தெய்வங்களுக்குப் பலியிட்டால் போதும் என்று எண்ணினான். தனிமையாகத் தென்னந்தோப்பினுள் சென்று பிரசங்கியார் கொடுத்த புத்தகத்தை வாசித்துப் பார்ப்போமே என்று எண்ணி வாசிக்க ஆரம்பித்தான். வாசித்தபிறகு பிற தெய்வங்கள் பற்றி பிரசங்கியார் கூறியவைகள் உண்மை என்று அறிந்து கொண்டான்.

ஆனால் இக்கருத்தினைத் தன் குடும்பத்தினிடம் கூறும்பொழுது அவன் சகோதரர்கள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை. அவன் பெற்றோர் இக்காரியங்களை மனதில் வைத்துக் கொண்டனர். இந்நாட்களில் தமிழ்நாட்டு வரலாற்றிலேயே கேள்விப்படாத விஷபேதி என்றறியப்படுகிற "காலரா நோய்" மக்களிடம் பரவ ஆரம்பித்தது. இதனால் ஊர் மக்கள் அம்மனை நினைத்து 1819ம் ஆண்டில் விசேஷித்த கொடை ஒன்றை நடத்தினார்கள். இதில் சுப்பிரமணியன் தவிர நம்பியின் குடும்பத்தார் யாவரும் கலந்து கொண்டார்கள். ஊராரோடு சுப்பிரமணியன் ஒத்துப்போகாததால் அவன் சகோதர்கள் அவன் மீது கோபப்பட்டார்கள். சிலநாட்கள் கழிந்த பிறகு சுப்பிரமணியன் மெதுவாகத் தன் குடும்பத்தினரிடம் இயேசுவின் அன்பைப்பற்றி மாலை நேரங்களில் பேச ஆரம்பித்தான். நம்பியின் அண்ணன் மகன் இலட்சுமணனும் இதிலே கலந்து கொண்டான். 1819ம் ஆண்டில் பெரிய பலவேசத்திற்குத் திருமணம் நடைபெற்றது. மணமகள் ஒரு பெயர்க் கிறிஸ்தவளாக இருந்தாள். ஒரு நாள் ஊரிலே பூஜாசாரி ஒருவர் திருநீறு எடுத்துவந்து தனக்கு எதிரேவந்த எல்லார் மேலும் பூசிக் கொண்டுவந்தார். அப்பொழுது எதிரில் வந்த சுப்பிரமணியன் அதைமறுத்து விட்டு அவரிடம் பிற தெய்வங்கள் பற்றி குறையாகக் கூறி அவருக்கு அறிவுரை கூறினான். கோபமடைந்த ஊரார் நம்பி குடும்பத்தை ஒதுக்கி துன்பப்படுத்த ஆரம்பித்து விட்டனர். ஆனால் நம்பியின் குடும்பம் சிறிதும் தளராமல் மேலும் இயேசுவைப்பற்றி அறிந்து கொள்ள சுப்பிரமணியனை பிரசங்கியாரிடம் (இயேசுவடியானின் தந்தை) அனுப்பி வைத்தனர்.

பிரசங்கியார் அவர்களை பாளையங்கோட்டையில் ஒரு பங்களாவில் (மேரி சார்ஜெண்ட் பள்ளி வளாகத்தில் உள்ளது) இருக்கும் ஜேம்ஸ் ஹாப்வ் ஐயரிடம் அனுப்பி வைத்தார். நம்பியின் மூன்று பிள்ளைகளும் அவரைச் சந்தித்து, அவரிடமிருந்து ஆலோசனைகள் கேட்டு, அவரிடமிருந்து ஞானோபதேசம் என்ற நூலையும், வேறு சில புத்தகங்களையும் பெற்றுக்கொண்டு அதை வாசிக்க ஆரம்பித்தனர். அதை வாசித்த பிறகு "நாங்கள் கற்பனைகள் மீறிய கொடிய பாவிகள்" என்ற உணர்வடைந்து பாவம் போக்கும் வழிகளை மேலும் அறிய விரும்பினார்கள். அப்படியே பிரசங்கியார் மூலம் வழிகாட்டப்பட்டு நம்பியும் பிள்ளைகளும் பாளையங்கோட்டையில் உள்ள இன்றைய தெற்குத் கடைவிதிப் பகுதியில் உள்ள ஒரு இல்லத்தில் வசித்த ரேனியஸ் ஐயரை சந்தித்தனர். ரேனியஸ் ஐயரிடம் சுமார் 48 கி.மீ தொலைவு நடந்தே சென்று நம்பியின் குடும்பம் அடிக்கடி தொடர்பு கொண்டது.

ரேனியஸ் ஐயர் சுப்பிரமணியனை ஹாப்வ் ஐயர் நிறுவிய செமினெரியில் சேர்த்தார். அதே செமினெரியில் பிரசங்கியார் மகன் ஏசுவடியானும் படித்தது சுப்பிரமணியன் கிறிஸ்துவைப் பற்றி மேலும் அறிய உதவியாயிருந்தது. ரேனியஸ் ஐயர் பலகிராமங்களில் பள்ளிகளை நிறுவினார். ஸ்ரீவைகுண்டத்தில் ஒரு பள்ளியைத் திறந்து, மாசிலாமணி என்ற ஒரு ஆசிரியரை நியமித்து, நம்பி குடும்பத்தினரை ஞானஸ்நானத்திற்கு ஆயத்தம் செய்யும் படி ஒழுங்கு செய்தார். ஊரார் மூலம் நம்பி குடும்பத்திற்கு பல இன்னல்கள் நேரிட்டாலும் அவர்கள் இயேசுவை உறுதியாய்ப் பற்றிக் கொண்டார்கள். இதன் மத்தியில் ரேனியஸ் ஐயர் திருப்புளியங்குடியிலும் ஒரு பள்ளியை நிறுவி, ஆலயம் கட்ட அஸ்திபாரமும் அமைத்தார். அப்பள்ளியில் ஆசிரியாராக சின்னப்பலவேசம் நியமிக்கப்பட்டார்.

ரேனியஸ் ஐயர் ஆலயத்தை (ஜுலை 18,1823ல் கட்டிமுடிக்கப்பட்ட) பிரதிஷ்டை செய்யவும், நம்பி குடும்பத்தினருக்கு ஞானஸ்நானம் கொடுக்கவும் திட்டமிட்டிருந்தார்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த ஊர்மக்கள் கிறிஸ்தவர்கள் பெருகிவிடக்கூடாது என்று எண்ணி நம்பி குடும்பத்தை ஊரை விட்டே விரட்ட திட்டம் போட்டு அவர்களைத் தாக்க முற்பட்டார்கள். இதனால் நம்பி, பெரியபலவேசம், சின்னப்பலவேசம் முதலியவர்கள் ஒரு இரவிலே தாக்கப்பட்டார்கள். வீட்டிற்குள் இருந்த நம்பியம்மாள் கதறி அழுது கொண்டு வெளியே ஓடி வந்தாள். அப்பொல்லாதவர்கள் அம்மூதாட்டியை தங்கள் பலம் கொண்டமட்டும் அடித்தார்கள். பலத்த காயத்துடன் அவள் சுருண்டு விழுந்தாள். பெண் ஒருத்தி குற்றுயிராய்க் கிடந்ததைக் கண்டபின்னரே அக்கொடியவர்கள் அகன்றனர். நம்பி குடும்பத்தின் மீது அன்புள்ளம் கொண்டவர்கள் காயப்பட்ட அவர்களுக்கு உதவிசெய்தார்கள். முயற்சிகள் பலனளிக்காமல் பாக்கியவதி நம்பியம்மாள் நான்காம் நாளில் இறைவன் இயேசுவின் பொற்பாதம் சரணடைந்தாள். அதற்குப் பிறகு ஊரார் அமைதி கொண்டனர். ரேனியஸ் ஐயர் ஆகஸ்டு 16,1823 ல் தன் உடன் ஊழியர்களோடு திருப்புளியங்குடி வந்து அவர்களுக்கு ஆறுதல் கூறியதோடு, ஆலயத்தையும் பிரதிஷ்டை பண்ணினார். மறுநாள் அவ்வாலயத்தில் மகிமையான ஒரு ஞானஸ்நான் ஆராதனையை அவர் நடத்தினார். நம்பியின் குடும்பத்தினர் அவ்வாலயத்திலே ஞானஸ்நானம் பெற்றார்கள். பாளையங்கோட்டைக்கு வெளியே உள்ள கிராமங்களில் C.M.S ஊழியத்தின் முதற்பலன் நம்பி குடும்பம். அதுமுதல் அக்கிராமத்தில் சபை தீவிர வளர்ச்சியடைந்தது. நம்பியின் பிள்ளைகள் பல சபைகளில் உபதேசியராகப் பணியாற்றி, பல சபைகளை உருவாக்கினார்கள். இந்த மாபெரும் எழுச்சிக்குக் காரணம் நம்பியம்மாளின் 'புண்ணிய இரத்தம்' திருநெல்வேலி திருச்சபையின் முதல்பெண், ஒரே பெண் இரத்தச் சாட்சியாகும். உன்னத நிலையை படிப்பறிவில்லா பேதை, குடிசை வாசி, நித உழைப்பாளி, கிறிஸ்தவ மூதாட்டி அடைந்து விட்டாள்.

ஆதாரம் : திருநெல்வேலி திருச்சபையின் பெண் இரத்தசாட்சி நம்பியம்மாள்.



# நல்லபங்கைத் தெரிந்து கொண்ட நகோமி

இடைவிடாமல் ஜெபம் பண்ணுங்கள் ஸ்தோத்திரத்துடன் ஜெபத்தில் விழித்திருங்கள் கொலோ: 4:2

அதிகாலை வேளையில் மிக இனிமையாகக் காற்றிலே மிதந்து வந்தது ஓர் இனியகானம். குரலுக்குரியவரைப் பார்க்கும் ஆர்வத்தோடு எட்டிப் பார்த்தேன். வெண்ணிற ஆடை அணிந்து கையில் திறந்த வேதாகமத்துடன் அமர்ந்திருந்தது வேறு யாருமில்லை. என் அருமைத்தாயார் திருமதி. நகோமி பாலையாதான் அவர்கள். மிக இனிய குரலில் பாடுவார்கள். எந்த வேலை செய்தாலும் பாடிக் கொணடேதான் செய்வார்கள். அதிகாலையில் எழுந்து பாடல்பாடி வேதம் வாசித்து ஜெபிப்பார்கள். எந்த வேலையைத் தொடங்கும்போதும் ஜெபித்து ஆரம்பிப்பார்கள். ஜெபத்துடனே முடிப்பார்கள். ஜெபமாதுவாகிய இவர்கள் 1901 ஆம் ஆண்டு நாசரேத்தில் பிறந்தார்கள். பள்ளிப்படிப்பு முடித்து, லோயர் கிரேடு ஆசிரியர்பயிற்சி பெற்று ஆசிரியையாகப் பணியாற்றிய இவர்கள் 1922 ஆம் ஆண்டு பழங்குளத்தை சேர்ந்த ஜோசப் பாலையா என்பவரின் துணைவியார் ஆனார். தூய்மையை விரும்புபவர், ஆடம்பரமாக ஆடை அணிவதிலும், மலர்சூடிக் கொள்வதிலும் மிக நாட்டமுடையவர்கள். என் தந்தை ஏ.ஜ. ஸ்கூலில் பணியாற்றினார்கள். பின்னர் சத்தியா பிரிண்டிங் பிரஸ்ஸின் மேனேஜராகப் பணியாற்றினார்கள். இவ்வாறாக இனிதே இல்லற வாழ்க்கை தொடர்ந்தது. 7 குழந்தைச் செல்வங்களை தேவன் கொடுத்தார். அதில் 3 குழந்தைகளை தேவன் தமக்கென எடுத்துக் கொண்டார். நொறுக்கப்பட்ட நிலையில் என் தாயார் ஆண்டவரைச் சொந்த இரட்சகராக ஏற்றுக் கொண்டார்கள். தேவ பணிக்கெனத் தன்னை அர்ப்பணித்தார்கள். தன் பிள்ளைகள் யாவரும் தேவனுடைய பிள்ளைகள் ஆக வேண்டுமென அல்லும், பகலும் கண்ணீரோடே ஜெபிக்கும் தாயார் இவர்கள். தேவபணி செய்வதற்கு அர்ப்பணித்த அம்மையாருக்குப் பொன்னம்மாள் சன்னியாசினி அவர்களின் நட்புக் கிடைத்தது. அவர்களோடு கூடி ஜெபித்தார்கள். என் தாயும், தந்தையும் அவர்களோடு கூட ஊழியம் செய்தார்கள். எனது தாயார் நன்றாகப் பாடுவார்கள். எல்லா வேலைகளையும் பாட்டுப் பாடிக் கொண்டே செய்வார்கள். வேதாகமத்தில் உன்னதப் பாட்டிலுள்ள சத்தியங்களை மிகச் சிறப்பாக எடுத்துக் கூறுவார்கள். எப்பொழுதும் சிரித்த முகத்துடன் இருப்பார்கள்.

எனது தாயார் மிகச் சிறப்பாக உடையணிந்து மிடுக்காகச் செல்வார்கள். ஒருநாள் என் தாயார் ஜெபிக்கும் பொழுது தேவன் அவர்களோடே இடைப்பட்டார். வெள்ளை ஆடையே அணிய வேண்டும், நகைகள் யாவையும் கழற்றிடவேண்டும் என்றார். என் தாயாரோ 'என் கணவர் உயிருடன் இருக்கும் பொழுது எப்படி?' என்று தூய ஆவியானவரோடே போராடினார். தேவனிடத்தில் தாழ்மையான ஒரு வேண்டுகோள் விடுத்தார், 'சமுதாயம் என்னைத் தூற்றாதபடி என் கணவருக்கு முன்னதாக நான் மரிக்க வேண்டும்' என மன்றாடினார். தேவன் அவர்கள் விருப்பப்படியே அருள் செய்தார்.

பொன்னம்மாள் சந்நியாசினி, ஜெபமணியம்மா, நகோமியம்மா இன்னும் சில பெண்கள் இணைந்து ஜெபிக்கையில் பெண்களுக்கென ஒரு கன்வென்ஷன் ஆரம்பிக்க வேண்டுமென ஒரு தரிசனத்தைக் கொடுத்தார். அதன்படி 1945 ஆம் ஆண்டு முதல் நாசரேத் அருகிலுள்ள திருமறையூரில் ஜெப ஐக்கிய கன்வென்ஷன் நடத்தப்பட்டது. அதன் காரியதரிசிகளாக திருமதி.நகோமி பாலையா அம்மாவும், திருமதி ஞானம் பால்ராஜ் அம்மாவும் இணைந்து செயல்பட்டனர். எனது தாயார் வீடுகள் தோறும் சென்று ஜெபித்து அவர்கள் கொடுக்கும் எட்டணா, 1 ரூபாய் இவற்றையும். அரிசி, கருப்பட்டி போன்ற பொருள்களையும் மகிழ்வுடன் பெற்றுக்கொண்டு

வந்து, அதனை வைத்து கன்வென்ஷன் கூட்ட நாட்களில் வருவோர்க்கு உணவளிப்பார்கள். 1945 முதல் 1959 ஆண்டு முடிய உள்ள 15 ஆண்டுகள் திருமறையூரிலேயே மிகச் சிறப்பாக கன்வென்ஷனை நடத்தினார்கள்.

அம்மாவின் வாழ்க்கையே ஜெபமாக அமைந்தது. வீட்டின் ஒரு மூலையில் ஒரு திரை போட்டு, சிறிய இடத்தை மறைத்து அதனுள் ஒரு சிறிய பாய் விரிக்கப்பட்டிருக்கும், சிறிய விளக்கும் வைக்கப்பட்டிருக்கும். ஒவ்வொருவரும் காலையும், மாலையும் அதனுள் சென்று தனி ஜெபம் செய்ய வேண்டும். எனது தாயார் வீட்டிலிருக்கும் பெரும்பாலான நேரத்தை ஜெப அறையில்தான் கழிப்பார்கள். எனது தாயார் கண்ணீரோடே குடும்பங்களுக்காக, சுகவீனருக்காக, பெலவீனருக்காக, குணப்படாத ஆத்துமாக்களுக்காக மிகுந்த பாரத்துடன் ஜெபிப்பார்கள்.

என்னுடைய தாயாருக்குத் தேவன் அநேக வாக்குத்தங்கள் கொடுத்துள்ளார். அதனை அப்படியே நிறைவேற்றியுமுள்ளார். பிள்ளைகளை வேத வாசிப்பிலும், கண்டிப்பிலும் வளர்த்தார்கள். எனது தந்தையும் சுதேச ஊழியராகப் பக்கத்துக் கிராமங்களுக்குச் சென்று சுவிசேஷ ஊழியம் செய்வார்கள். தினமும், காலை, மாலை இருவேளையும் வேதம் வாசித்து ஜெபித்த பின்னர்தான் நாங்கள் பாடங்களைப் படிக்க வேண்டும். ஞாயிற்றுக் கிழமைகளில் நாங்கள் பாடப்புத்தகங்களைப் படிக்கக் கூடாது. ஆலயத்திற்குச் சென்று வந்தவுடன் வேதாகமத்தில் ஒரு பகுதியை மனப்பாடம் செய்து ஒப்புவிக்க வேண்டும். ஒப்புவித்த பின்னர்தான் எங்களுக்கு மதிய உணவு வழங்கப்படும். வேதாகம சம்பந்தப்பட்ட கதைப் புத்தங்களே அன்று வாசிக்க வேண்டும். இவ்விதமாக ஜெபம், வேதவாசிப்பு இவற்றைக் கைக்கொள்வதில் மிக கண்டிப்புடன் நடந்து கொள்வார்கள். என் தாயாரும், தந்தையாரும் செல்லும் சுவிசேஷ ஊழியங்களுக்கு எங்களையும் உடன் அழைத்துச் செல்வர். தினமும் காலை மாலை குடும்ப ஜெபம் தவறாமல் நடைபெறும். எந்தெந்தக் கிழமைகளில் என்ன பாடல்களைப் பாடவேண்டும் எனத் திட்டமிட்டுப் பாடல்களைப் பாடுவோம் சனி இரவு கீர்த்தனை, ஞாயிறு மதியம் பாமாலை என இவ்வாறாகத் திட்டமிட்டு பாடுவோம். ஞாயிறன்று மூன்று முறை குடும்ப ஜெபம் செய்வோம். யார் வெளியே சென்றாலும் ஜெப அறையில் ஜெபித்து விட்டுதான் செல்ல வேண்டும். என் தாயார் ஒவ்வொருவருக்கும் தலையில் கைவைத்து ஜெபித்து அனுப்புவார்கள். நாங்கள் 4 பேர். என் தாயார் உயிரோடு இருக்கும்வரை நாங்கள் எந்த வியாதிக்கும் மருந்து சாப்பிட்டதே இல்லை. ஆஸ்பத்திரியைப் பார்த்ததும் இல்லை. என் தாயார் ஜெபித்து எண்ணெய் பூச சுகம் கிடைத்துவிடும். அநேக நோயாளிகள் ஜெபிப்பதற்காக என் தாயாரிடம் வருவதுண்டு. என் தாயாரும் நோயாளிகள் வீடுகளுக்குச் சென்று ஜெபிப்பார்கள். எனது தாயாரின் வாழ்க்கையின் முழுப் பகுதியையும் ஜெபமே ஆட்கொண்டிருந்தது. 1959 ஆம் ஆண்டு தேவன் வாக்குக் கொடுத்திருந்தார். 'உனக்குச் சித்திரத்தையலாடை வைக்கப்பட்டுள்ளது. நீதியின் கிரீடம் வைக்கப்பட்டுள்ளது. உலகத் தொல்லையினின்று உன்னை விடுவிப்பேன்' என்று அதே ஆண்டு நவம்பர் 8ம் நாள் ஞாயிறு ஆராதனைக்குச் சென்று வந்தார்கள். மாலை தாய்மார் கூட்டத்திற்குச் சென்றுவந்தார்கள். சுகவீனமாயிருந்த அண்ணன் மகன் படுத்திருந்த கட்டிலினருகில் முழங்காலிட்டு ஜெபித்துக் கொண்டிருந்த என் தாயார் சத்தமாக அழுது ஜெபித்தார்கள். 8 மணிக்கு குடும்ப ஜெபம் செய்வதற்காக எழுப்பினோம். பதிலில்லை. ஜெப நிலையிலேயே தேவன் தம்மோடு இருக்க அழைத்துக் கொண்டார். நீதிமான்களின் மரணம் அவர் பார்வையில் அருமையானது,

ஜெபிக்கும் தாயின் பிள்ளைகளாகிய நாங்களும் தேவனுக்குச் சாட்சியாக நிற்க தேவன் கிருபை செய்துள்ளார். ஜெபிக்கும் தாயாரின் பிள்ளைகள் ஊழியர்கள் ஆவார்கள் என்பதில் ஐயமே இல்லை. அருமைத் தாய்மாரே! இன்று உங்கள் சாட்சி உங்கள் குடும்பத்தில் ஆரம்பிக்கட்டும்! பிள்ளைகளுக்குக் கற்றுக் கொடுப்பதைவிட அவர்களுக்கு மாதிரியாக வாழ்ந்து காட்டுங்கள். ஜெபிக்கும் தலைமுறையை உருவாக்குங்கள்! மிஷனரிகள் உங்கள் குடும்பங்களிலிருந்து புறப்பட்டுச் செல்லட்டும். ஜெபதொனி ஜெய தொனியாக வானமட்டும் எட்டட்டும். !

**குளோரி செல்லதுரை**

# பாட்டுப்பாட்டி – பால்மணி அம்மா

பால்மணி அம்மா என்ற அல்லேலூயா அம்மா கி.பி .1917 ம் ஆண்டு தூத்துக்குடி மாவட்டத்திலுள்ள முதலூர் என்ற கிராமத்தில் பிறந்தார்கள். முக்கந்தர் ஸ்தேவான் நாடார், ஞானம் என்பவர்களுக்கு ஆறாவது குழந்தையாகப் பிறந்தார்கள். வாலிப வயதிலேயே இரட்சிக்கப்பட்டு, பரிசுத்த ஆவியின் அபிஷேகம் பெற்றவர்கள். தனது அக்கா இறந்துவிட்டதால் அக்கா குழந்தைகள் இருவரை வளர்த்துக் கொண்டு தமது 26 வது வயது வரை திருமணம் வேண்டாம் என்று இருந்தவர்கள். குடும்பச் சூழ்நிலையின் காரணமாக 27 ம் வயதில் 1947 ம் ஆண்டு திருமணம் செய்து கொண்டார்கள். எங்கள் அப்பா S. ஜெபராஜ் அவர்கள் பு.ம். குடும்பத்தில் உள்ளவர்கள். ஆதலால் அவர்களின் திருமணம் நாசரேத் ஆலயத்தில் நடைபெற்றது. கடவுளின் கிருபையினால் மூன்று ஆண் குழந்தைகளையும், ஒரு பெண் குழந்தையையும் பெற்றெடுத்துக் கண்மணிகளைப் போல் வளர்த்தார்கள். நான்கு குழந்தைகளையும் கடவுள் பயத்துடனும், தேவ பக்தியிலும் ஜெபத்தின் மூலமாகவே வளர்த்தார்கள். தாய்மார்கள் கூட்டம், தொகுதி ஜெபக்கூட்டம் என்று வேலை செய்ததால் வீட்டிலிருக்கும் நேரம் குறைவு. ஆனால் வீட்டில் இருக்கும்போது பாடிக்கொண்டே தான் இருப்பார்கள். தெருச் சிறுவர்கள் மத்தியில் பாட்டுப்பாட்டி என்று அன்புடன் அழைக்கப்பட்டார்கள்.

# ‘மரித்தும் பேசும் மாது’

(திருமதி. சா. மனோன்மணி அம்மாள் மூக்குப்பீறி)

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு பாவ மனுமக்களை மீட்க பரமன் பூவில் மானிடனாய் அவதரித்து, கிருபை நிறைந்த இரட்சகராய் பாவம் போக்கும் பலியாகத் தம்மை அர்ப்பணித்து தமது இணையற்ற அன்பை வெளிப்படுத்தினார். அந்த அன்பினை உணர்ந்து இயேசுவை இரட்சகராக அறிந்து கொண்டு பாவமன்னிப்படைந்து அவருக்கு உயிருள்ள சாட்சிகளாய் திகழ்ந்தவர்கள் பலருண்டு.

அவ்வாறு வாழ்ந்தவர்களில் மூக்குப்பீறி சபையைச் சேர்ந்த திருமதி. மனோன்மணி அம்மாளும் ஒருவராவர். பச்சமால் புலவர், முத்துலட்சுமி அம்மாள் என்ற வைராக்கியமுள்ள இந்துப் பெற்றோருக்கு மகளாகப் பிறந்தவர். அன்னாருடைய தகப்பனார் ஜவுளி வியாபாரம் செய்தும் இந்துக் கோவில்களில் பஜனைப் பாடல்கள் பாடியும் வந்தனர். அம்மாளுக்கும் பிரகாசபுரத்தைச் சேர்ந்த சாமி நாடார் என்பவர்களுக்கும் திருமணம் நடந்தது. வாலிப வயதினிலே காக்கா வலிப்பு நோய் இருந்தது. திருமணத்திற்கு பின்பும் அந்நோய் தொடர்ந்தது. குடும்பமாக செட்டியாபத்து கோவிலுக்கு நடந்து செல்வார்கள். இந்துக் கிரியைகளில் வைராக்கியமானவர்கள். வியாதியினின்று குணம் பெற புண்ணியஸ்தலங்களை நாடிச் சென்று வழிபட்ட போதிலும் எந்த விடுதலையும் கிடைக்கவில்லை.

ஒரு நாளில் ஜெபமணி அம்மாள் மூலம் ஆண்டவருடைய அன்பை அறிந்து தம்மை ஆண்டவருக்கு ஒப்புக் கொடுத்தார்கள். விடாப்பிடியோடு ஆண்டவருடன் போராடி வலிப்பு நோயிலிருந்து பூரண சுகம் பெற்றார்கள். அந்நிலையில் தனக்கு ஞானஸ்நானம் கொடுக்கும் படி கனம் B.A ஞானசிகாமணி ஐயரவர்களைக் கேட்டார்கள். அவர்கள் ‘நீங்கள் கிறிஸ்து மார்க்கத்தில் நிலைத்திருக்க மாட்டீர்கள்’ என்று கூறி ஞானஸ்நானம் கொடுக்க மறுத்து விட்டார்கள். வீட்டுக்குத் திரும்பி வரும் வழியில் மூக்குப்பீறி சபையிலுள்ள கண்மணி அம்மாள் ஒரு தாயார் இதனை அறிந்து மீண்டும் ஐயரவர்களிடம் அழைத்துச் சென்றனர். குருவானவரிடம் “இவளுக்கு ஞானஸ்நானம் கொடுங்கள். இவளுக்கு நான் பொறுப்பாளி” என்று கூறி பொறுப் பேற்றதால் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது. பிற்காலத்தில் கனம் B.A. ஞானசிகாமணி ஐயரவர்கள் ஓய்வு பெற்ற பின்னரும் இவர்களை அடிக்கடி சந்தித்து, அன்புடன் ஆலோசனை கூறி வந்தார்கள் மனோன்மணி அம்மாளும் இறுதிவரை கிறிஸ்துவில் நிலைத்திருந்து சாட்சி பகர்ந்தார்கள்.

இவர்களது கணவர் கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளாவிடினும் குடும்ப ஜெபத்திற்கும் வேதம் வாசிப்பதற்கும் தடை சொல்லவில்லை. சில வருடங்களுக்குப் பிறகு இவர்களது கணவர் கால்களில் கொப்புளம் காந்தல் ஆகியவற்றால் கஷ்டப்பட்டார்கள். மருத்துவத்தினால் சுகம் கிடைக்கவில்லை. பல வைத்தியர்களைப் பார்த்தும் மருத்துவத்திற்கு அதிகமாய் செலவழித்தும் புண்கள் குணமாகாமலிருந்தன. அப்பொழுது மனோன்மணியம்மாள் தன் கணவரிடத்தில் தான் ஜெபம் செய்து தருகிற எண்ணெயைப் பூசும் படியும் சுகமானால் ஞானஸ்நானம் பெற்று சபையில் சேரும் படியும் கூறினார்கள். அவ்வாறே நீண்ட நாட்களாய் ஆறாமல் இருந்த புண்கள் ஆறி சுகம் பெற்று மூக்குப்பீறி பரி. மாற்கு ஆலயத்தில் ஞானஸ்நானம் பெற்றார்கள்.

சிறிது காலத்திற்கு பின் அவர்களது கணவர் மரணமடைந்தார்கள். அடக்க நேரத்திலும் அங்கு வந்திருந்தவர்களுக்கு தாங்கள் குடும்பமாக ஆண்டவரை ஏற்றுக் கொண்டதை ஆண்டவருக்கு மகிமையாக சாட்சியாகக் கூறினார்கள்.

இனமும் மூன்று வேளை குடும்ப ஜெபம் செய்வார்கள். பக்கத்து வீட்டிலிருந்தவர்களும் இந்த குடும்ப ஜெபத்தில் கலந்து கொள்வார்கள். தனது மூன்று பிள்ளைகளையும் தனது தாயார் பொறுப்பில் விட்டு விட்டு ஆண்டவருக்கு ஊழியம் செய்து வந்தார்கள். மிகவும் இளம் வயதில் கணவனை இழந்ததால் அழகாக இருந்த அவர்கள் ‘ஆண்டவரே என் தோற்றத்தை மாற்றும் மற்றவர், பார்வையில் என்னை ஒரு வயதான தாயாகக் காட்டும்’ என ஜெபித்தார்கள். அவ்வாறே கர்த்தர் தனக்கு உதவினார் என்று 30 வருட ஊழியத்திற்குப் பிறகு சொல்லி மகிழ்ந்தார்கள்.

ஊழியத்திற்காக பல இடங்களுக்குச் சென்றுள்ளார்கள். இந்துக்கள் மத்தியில் தைரியமாய்ப் பேசுவார்கள். சில சமயங்களில் அவர்களைப் பேசவிடாமல் எதிர்க்கிறவர்கள். அவர்கள் சாட்சியைக் கேட்டு அமைதியாய்த் திரும்பிச் செல்வார்கள். அவர்களது உயிருள்ள சாட்சி ஏராளமானவர்களை ஆண்டவரண்டை வழி நடத்துவதாயிருந்தது.

மூக்குப்பீறி தாய்மார் கூட்டத்தில் உற்சாகமாய்ப் பங்கேற்று, ஐ.எம்.எஸ். ஊழியத்தை ஆதரித்தல் சுவிசேஷ ஊழியம் செய்தல் ஆகியவற்றில் மிகுந்த ஆர்வம் காட்டினார்கள். தவறு செய்பவர்களாயிருந்தாலும் தைரியமாகத் தட்டிக் கேட்பார்கள். அவர்களது கண்ணீர் ஜெபத்தின் மூலம் அவர்களுடைய பிள்ளைகள் ஆண்டவருக்காகத் திருச்சபையில் ஊழியம் செய்யும் பாக்கியத்தை கர்த்தர் தந்திருக்கிறார். மூக்குப்பீறி, பிரகாசபுரம், நாசரேத் தாய்மாருடன் இணைந்து சுவிசேஷ ஊழியம் செய்து வந்தார்கள்.

இரவு பகல் எனக்கருதாமல் பல இடங்களுக்கு அலைந்து திரிந்து ஆண்டவரின் அன்பை அறிவித்த இத்தாயார் மே மாதம்

நடைபெற்ற பெண்கள் கன்வென்ஷனில் கலந்து கொண்ட போது ஒரு பள்ளத்தில் விழுந்து அடிபட்டதன் காரணமாக சிறிது காலம் சுகவீனமாயிருந்து ஆண்டவரின் பரம அழைப்பைப் பெற்றனர்.

அவர்களது அடக்கத்தின் போது கல்லறைத் தோட்டத்தில் ஆராதனை முடிவுறும் சமயத்தில் ஓடோடி வந்த செல்லையா என்பவர் மனோன்மணி அம்மாவைக் குறித்து தான் சில வார்த்தைகள் பேச வேண்டும் என்றார். தான் தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவராயிருந்த போதிலும் தான் ஆண்டவரை ஏற்றுக் கொள்ளவும் சபையில் சேரவும் அம்மாதான் காரணமாயிருந்தார்கள். கடைசிவரை மருந்து சாப்பிடாமலிருந்தார்கள். எனது வியாதியினிமித்தமாகவும் ஜாதியினிமித்தமாகவும் அநேகர் என்னை சேர்த்துக் கொள்ள திகைத்த போதெல்லாம் என்னைத் தாங்கி சபையில் என்னை ஏற்றுக் கொள்ளும்படி செய்தார்கள். என்று கூறியவற்றை அனைவரும் அமைதியாய்க் கேட்டுச் சென்றார்கள்.

அன்னார் மறைந்த போதிலும் அவரது வைராக்கியமான சாட்சி நிறைந்த வாழ்க்கை இன்னும் ஆண்டவரின் நாம மகிமைக்காகப் பேசப்படுவது சிறப்பன்றோ!

இன்னும் நம் அருகாமையிலே புறமஸ்தராயிருக்கும் ஆத்துமாக்களைக் குறித்த நம் கரிசனை என்ன ?

உன் கிரியைகளை அறிந்திருக்கிறேன். உனக்கு கொஞ்சம் பெலன் இருந்தும், நீ என் நாமத்தை மறுதலியாமல், என் வசனத்தைக் கைக் கொண்டபடியினாலே, இதோ திறந்த வாசலை உனக்கு முன்பாக வைத்திருக்கிறேன். வெளி 3:8

**திருமதி. சுகந்தி சாமுவேல்**



# ஆபரணம் லீதியா

ஆலங்குளம் திருநெல்வேலி - தென்காசிப் பெரும்பாதையிலிருக்கும் ஒரு பெரிய ஊர். பல சாதி மக்கள் வாழ்ந்த கிராமம். ரேனியஸ் ஐயரின் நாட்களில் அங்கு சுவிசேஷம் பிரசங்கிக்கப்பட்டது. கூம்ஸ் என்னும் பெயரையுடைய ஓர் ஆங்கிலோ - இந்திய உபதேசியாரின் விடா முயற்சியால் 1829-ம் ஆண்டில் ஒரு சிலர் கிறிஸ்து நாதரை விசுவாசித்தனர், ஒரு சிறு சபை தோன்றியது.

அச்சபையின் இளம் பிராயத்தில் அதற்கேற்பட்ட துன்பங்களுக்கு அளவில்லை. கிறிஸ்துமார்க்கம் அப்பகுதியில் வேரூன்றினதைச் சகியாத பிராமணரான மிராசுதார், வேளாள வகுப்பினரான பெருந்தனக்காரர், அழகப்பநாடார் போன்ற பண்ணையார்கள், மறவர்குல மக்களிற் சிலர் முதலியோரால் ஆலங்குளம், குருவன் கோட்டை, காசியாபுரம், நல்லூர் முதலிய சபைகள் மிகுந்த உபத்திரவத்தி குள்ளாயின, ஆலங்குளம் சபையின் முதல் இருபது ஆண்டுகள் கலக்கம் மிகுந்த நாட்களாயிருந்தன.

உக்கிரன் கோட்டைக்கு அருகில் ரெட்டியார்பட்டி என்றொரு கிராமம். ரேனியஸ் ஐயரின் பார்வை அங்கு திரும்பியது, செமினெரி மாணவரும் பிரசங்கிமாரும் அங்கு அனுப்பப்பட்டனர். கர்த்தருடைய ஆசீர்வாதம் அவர்களது ஊழியத்திலிருந்தது. ஒரு சிறு சபை அங்கு உருவானது (1837): 2 ஆண்கள், 2 பெண்கள், ஐந்து சிறுவர்களைக் கொண்ட இரண்டு குடும்பத்தினர் அச்சபை மக்கள்,

அவர்களுக்கு உறவினரான ஒரு பெண் பல ஆண்டுகளுக்கு முன் ஆலங்குளத்தைச் சேர்ந்த ஒருவருக்குத் திருமணமாகியிருந்தாள். அவ்வூரில் கிறிஸ்து சபை தோன்றிய பொழுது அவளும் அவளுடைய கணவனும் விசுவாசிகளாகித் திருச்சபையில் சேர்ந்தார்கள். ஞானஸ்நானத்துக்கு ஆயத்தப்படுகிறவர்கள் கற்க வேண்டிய பாடங்களை அவரை விட அவளே விரைவில் கற்றாள்! குறித்த நாளில் லீதியாள் என்ற பெயருடன் ஞானஸ்நானமும் பெற்றாள்.

ஆலங்குளம் சபைக்கு உண்டாயிருந்த துன்பம் நின்றபாடில்லை 1841-ல் சுமார் 400 பேர் கொண்ட 130 குடும்பங்கள் இந்து மதத்தைத் துறந்து, கிறிஸ்து சபையில் சேர்ந்தனர். உடனே பகைவர் கொதித்தெழுந்து அம்மக்களைப் பயங்கர உபாதைகளுக்குள்ளாக்கினர். அவைகளெல்லாவற்றிலும் ஆலங்குளம் சபையார் உறுதியாக நின்று, விசுவாசத்தைக் காத்துக்கொண்டனர்.

ரெட்டியார்பட்டியிலும் முதற்கிறிஸ்தவர்களின் உறவினர் பலர் கிறிஸ்து சபையில் சேர்ந்தனர். துவக்க காலங்களில் அவர்களுக்கும் உபத்திரவமிருந்து வந்தது. அக்காலங்களில் லீதியாளும் அவளது கணவனும் தங்கள் மகனுடன் அடிக்கடி ரெட்டியார்பட்டிக்குச் சென்று, அப்புதுக் கிறிஸ்தவர்களை ஊக்கப்படுத்தி வருவதுண்டு. ஆலங்குளத்தில் உபத்திரவக் காலங்களில் அவர்கள் பெற்ற அனுபவம் இக்கிறிஸ்தவப் பணியில் அவர்களுக்கு நன்கு பயன்பட்டது. உக்கிரன்கோட்டை உபதேசியாரான தாவீது அருளப்பன் அந்நாட்களில் ரெட்டியார்பட்டிச் சபையையும் கண்காணித்து வந்தார் அவ்வூழியத்தில், தான் ரெட்டியார்பட்டிக்குப் போகும் போதெல்லாம், லீதியாள் அவருக்கு மிகுந்த உதவியாயிருப்பது உண்டு.

ஆலங்குளத்தில் அவள் வசித்த காலத்தில் அவளது குடும்ப வாழ்க்கையில் இடிவிழுந்தது; அவளுடைய கணவன் திடீரென்று இறந்துபோனார். லீதியாளின் துயரத்தை யாரால் வர்ணிக்கவியலும்? ஆனாலும் ஆறுதலின் ஆண்டவர் அவளுடைய அங்கலாய்ப்பை மாற்றினார் தமது தாசராகிய நல்லூர் ஷாப்ற்றர் ஐயர், திருமதி ஷாப்ற்றர் அம்மாள் முதலியோரை அனுப்பி, அவர்களுடைய ஆறுதல் மொழிகளினாலும் உபதேசத்தினாலும் லீதியாளின் உள்ளத்தில் நிம்மதியும் சமாதானமும் நிலைக்கச் செய்யக்

கர்த்தர் சித்தங்கொண்டார். (இவர் பிற்காலத்தில் சாயர்புரத்தில் உபதேசியாராயிருந்து, திருநெல்வேலி S.P.G. மிஷனின் முதல் இந்திய குருவாக அபிஷேகம் பெற்று (1854), அங்கும், மேலச்செய்த்தலையிலும் குருப்பணி நிறைவேற்றினார்.)

தன் துக்க நாட்கள் நிறைவேறிய பின், லீதியாள் நல்லூர் மிஷனெரிமாருடன் அதிகமாகிப் பழகிக், கல்வி அறிவிலும். வேத அறிவிலும், கிறிஸ்தவ சேவையிலும் மேலும் மேலும் தேர்ச்சி பெற்றாள். நல்லூர், காசியாபுரம், ஆலங்குளம் சபைகளில் அவளுடைய நற்கிரியைகளாலும் கிறிஸ்தவ அன்பினாலும் தேற்றப்படாத குடும்பங்களில்லை. வீடுகளைச் சந்தித்துப் பெண்களுடன் ஆவிக்குரிய உரையாடல்கள் செய்து, இக வாழ்க்கையில் தேவையான ஆலோசனைகள் சொல்லிக், கிறிஸ்தவப் பெண்களனைவருக்கும் ஒரு மூத்த சகோதரியாகவும் தாயாகவும் விளங்கினாள். ஆண்டவர் மீது அவள் கொண்ட அன்பின் காரணமாய் அவள் அவரை அறியாதவர்களை நேசித்து, அவர்களுடைய ஆத்ம மீட்புக்காகப் பாடுபடும் ஓர் உத்தம சுவிஷேகியாகத் திகழ்ந்தாள். தினம் ஒரு புறமதத்தினரான ஆணுக்காயினும், பெண்ணுக்காயினும் சுவிசேஷம் சொல்வதைத் தன் கடமையெனக் கொண்டாள், கிறிஸ்தவர்கள் தங்கள் சன்மார்க்க உயர் நிலையிலிருந்து விழுந்துவிடக்கூடாதே என்று அவர்களுக்கும் உபதேசித்து வழி நடத்துவது தன் உத்திரவாதங்களிலொன்று என்று நம்பினாள் பரிசுத்தத்திலும் விசுவாசத்திலுமிருந்து யாராவது நிலை தவறுவதைக் கண்டால், அவள் சகிக்கமாட்டாள். அப்படிப்பட்டவர்களுக்காக ஊக்கமாக ஜெபிப்பாள். அடிக்கடி அவர்களைச் சந்தித்து எச்சரிப்பாள்; புத்திமதி கூறுவாள்; சோதனைகளை ஜெயிக்க ஆலோசனைகள் கொடுப்பாள். சபைகளுக்குத் துன்ப முண்டாயிருந்த காலங்களில் யாரும் மறுதலித்துவிடக்கூடாதே என்று மருகுவாள் ஊக்கமாக ஜெபிப்பாள். ஓடியாடி மக்களைக் கண்டுபேசி விசுவாசத்தைக் கைவிடாதிருக்க ஊக்குவிப்பாள். பெருமளவில் வெற்றியும் பெறுவாள்.

இத்தகைய கிறிஸ்தவ பக்தையின் காதுகளில் விழுந்தது ஒரு துயரச் செய்தி! அது என்னவெனின் பெருகி வந்த, அவளது சொந்த ஊரான ரெட்டியார்பட்டிச் சபையார், மிராசுதார் முதலானவர்களுடைய பயமுறுத்தல்களுக்குப் பயந்து, தங்களுக்குள் ஆலோசித்துத், தங்களைக் காத்துக்கொள்ளத் திட்டமிட்டு, அவ்விரோதிகளை நயந்து மறுதலித்துவிடுகிறோமென்று கூறிவிட்டனரென்பதே அத்துர்ச்செய்தி. மிஷனெரிமாரும் உபதேசிமாரும் எவ்வளவோ முயற்சித்தும், அம் முடிவை மாற்றிக்கொள்ள சபையார் சம்மதிக்கவில்லையென்றும் கேள்விப்பட்டாள் அவளடைந்த துயரத்துக்கோர் அளவில்லை. அன்றிரவு முழுவதும் கண்ணீரோடு ஜெபித்தாள், ஜெபித்து ஒரு முடிவுக்கு வந்தாள்.

மறுநாள் காலையில் பொழுது புலருமுன் புறப்பட்டாள் ரெட்டியார்பட்டிக்கு. கால் கடுக்க நடந்தாள் ஓட்டமும் நடையுமாக. வயதாகிவிட்டபடியால் நடை தளர்ந்தது. ஆங்காங்கே நின்ற மரங்களின் நிழலில் சற்று தரித்துக் களைப்பாறி, திரும்பவும் நடந்தாள். நடந்து களைத்தவளாக ரெட்டியார்பட்டியை அடைந்தாள்.

ஊர் மக்களும் உறவினரும் 'வா, அம்மா', என்று வரவேற்றனர். வந்த காரியம் வினவினர்; நலம் விசாரித்தனர். அவளோ அதற்கெல்லாம் பதில் சொல்லாமல், 'நான் வந்த நோக்கம் ஒன்றே ஒன்றுதான். நீங்களெல்லாரும் கர்த்தரைப் புறக்கணித்துக் காளியை வணங்கப் போகிறீர்களென்று நான் கேள்விப்பட்டேனே; அது நிசந்தானா?" என்க, அவர்கள் "ஆம்" என்றனர். அதைக் கேட்ட அவள் நெருப்பில் விழுந்த புழுவெனத் துடித்தாள். உள்ளம் துவண்டது, முகம் வாடினது. நேராக நடந்தாள். உறவினர் தங்கள் வீட்டுக்கு அழைத்தனர் அவள் அவர்களுடைய அழைப்பை ஏற்றுக்கொள்ளாமல், தனக்கு அறிமுகமாயிருந்த ஒரு விதவையின் வீட்டுக்குச் சென்று, அங்கு தங்கிக்கொண்டாள்

அங்கு தன்னைத் தேடிவந்த உறவினர், சிநேகிதர் ஆகிய எவருடனும் பேச மறுத்தாள். ஆகாரத்தையும் விலக்கிப் பிற்பகல் முழுவதும் ஜெபித்தாள். மாலையில் சபையில் தலைவர்களாயிருந்தவர்களின் வீடுகளுக்குச் சென்றாள். அன்புடன் வரவேற்ற அவர்களிடம் மனவேதனையுடன் பேசினாள். இரட்சகரின் அன்பை எடுத்துக் கூறினாள், சிலுவைக் காட்சியை விவரித்தாள். அன்பரின் உள்ளத்தின் வேதனையைப் படம் பிடித்துக் காட்டினாள். கண்ணீரோடு கிறிஸ்துவின் பாடுகளை விளக்கினாள். இப்படியே ஒவ்வொரு வீடாகச் சென்று பேசி, அத்தலைவர்களின் உள்ளங்களில் உணர்வுண்டாக்கினாள். அவர்கள் அன்புடன் கொடுத்த சிற்றுண்டிகளை வேண்டாமென்று ஒதுக்கினாள். தண்ணீர் தானும் பருகவில்லை.

அன்றிரவு ஆகாரமின்றி, ஜெபத்தில் கழித்தாள் மறுநாளும் உபவாசம். பிற்பகலில் ஜெபம். மாலையில் தலைவர்களின் வீடுகளில் உரையாடல், இன்று அவர்களுடைய பாவ நிலைமை, வரும் தண்டனை முதலியவைகளை வேத வசனங்களைக் கொண்டே அவள் அவர்களுக்கு எடுத்துக்காட்டிக் கண்ணீரோடு ஒவ்வொரு வீட்டிலும் ஜெபித்து விட்டுத் திரும்பினாள்.

அன்றிரவும் உபவாச ஜெபம். அடுத்த நாள் காலையில் அவ்வீட்டம்மாள் தந்த பழைய சோறை அருந்திவிட்டு, முற்பகலையும் பிற்பகலையும் ஜெபத்தில் கழித்தாள் மாலையில் மறுபடியும் தலைவர்களுடைய வீடுகளுக்குச் சென்றாள் இந்த நாளில் இரண்டாம் வருகை, நியாயத்தீர்ப்பு இவைகளை எடுத்துச் சொல்லி, மறுதலிப்பதினால் அவர்கள் இழக்கவிருந்த மகிமைகளை அவர்கள் முன் வைத்தாள்.

நான்காம் ஐந்தாம், ஆறாம் நாட்களில் சபை மக்களுடைய வீடுகளொவ்வொன்றுக்கும் சென்று போதித்தாள் ஒருவருடைய வீட்டிலாவது அவள் எதுவும் புசிக்கவில்லை.

ஊராருக்குள் ஓர் அசைவு 'இந்த அம்மாள் ஏன் பட்டினி கிடந்துகொண்டு நம்மிடம் வந்து அங்கலாய்க்கிறாள்? இதனால் இவளுக்கு என்ன லாபம்? நம் ஊரைச்சேர்ந்தவளாயும் உறவினளாயுமிருப்பதினால் தானே நம்மீது இவ்வளவு கரிசனை கொள்கிறாள்?", ஊரார் இவ்வாறு சிந்தித்தனர்.

ஏழாம் நாள் மாலையில் ஊர்க்கூட்டம். தலைவர்களும் சபையாரில் ஒன்றிரண்டு பேரும் ஒருவர் பின் ஒருவராகப் பேசுகிறார்கள் அப்பேச்சுக்களின் சாராம்சம்: 'லீதியாளை இவ்வளவு அக்கறைகொள்ளச் செய்தது எது? இயேசு நாதரின் அன்பு தானே! அந்த அன்பு எத்தன்மையது என்று இந்த அம்மாள் நமக்குத் தெளிவாகப் போதித்ததுமின்றி, ஆண்டவரை மறு தலிப்பதினால்

நமது இழப்பு எப்படிப்பட்டது என்றும் விளக்கிச் சொல்லி விட்டாள் இனி நாம் நமது ஆண்டவராகிய இயேசுவை விட்டு விலகுவதில்லை என்ன வந்தாலும் சரி, பொறுமையுடன் சகித்து விசுவாசத்தில் உறுதியாயிருப்போம்", என்பது.

லீதியாள் கேட்டுக்கொண்டேயிருந்தாள்; கேட்டு ஜெபித்துக் கொண்டேயிருந்தாள். லீதியாளே, உன் ஜெபம் கேட்கப்பட்டது! இதோ, ஊருக்குப் பெரியவர் பேசுகிறார்: 'கர்த்தரை மறுதலிக்கமாட்டோம். எதுவாயினும் உறுதியாயிருப்போம். சரி தானே?" சபையாரின் ஏகோபித்த முழக்கம்:' ஆம், ஆம்: கர்த்தரே தெய்வம்! கர்த்தரே தெய்வம்!"

கூட்டம் கலைந்தது. எல்லாரும் லீதியாளைச் சூழ்ந்து கொள்கிறார்கள் ஆளுக்கொருபுறம் அவளைப் பராட்டுகிறார்கள். சபைத் தலைவர்கள் வருகிறார்கள் "அம்மா, உங்களுக்குச் சந்தோஷந்தானே, அம்மா? நாங்கள் கெட்டழிந்துவிடாமல் காத்தரருளின பராபரனுக்கும், அவருடைய தூதுவராக வந்த உங்களுக்கும் நாங்கள் அதிக நன்றியுள்ளவர்களாயிருக்கிறோம். இந்த ரெட்டியார்பட்டிச் சபை என்றென்றும் உங்களை மறவாது, அம்மா," என்றார் பெரியவர். லீதியாள் புன்னகைத்தாள்; அவள் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தோடியது.

அக்காலத்தில் உக்கிரன்கோட்டை பகுதி பங்களாச்சுரண்டை சேகரத்துடன் இனிணைந்திருந்தது. அச்சேகர மிஷனெரி T.G. பேரன்புருக் ஐயர் ரெட்டியார்பட்டிச் சபை மனந்திரும்பின செய்தியைக் கேள்விப்பட்டு நன்றி ஸ்தோத்திரம் ஏறெடுத்ததுடன், லீதியாளைப் பற்றித் தன் வருடாந்தர அறிக்கையிலும் எழுதிவிட்டார். அவ்வம்மையாரின் புகழ், அதின் மூலம் லண்டனுக்கும் போய்ச் சேர்ந்தது. திருநெல்வேலி மிஷனெரிமார் ஒவ்வொருவரும் குற்றாலத்துக்கு சீஸனு'க்கு போகும் வழியில் ஆலங்குளத்தில் தாமதித்து, அவள் வீட்டிற்குச் சென்று, பாராட்டுத் தெரிவித்து, ஜெபித்து ஆசீர்வதித்துப் போயினர் (1849-50)

ஒரு தடவை, கடாட்சபுரம் C. M. S. பெண்கள் ஆசிரியப் பயிற்சிப் பள்ளித் தலைவரரன கிபர்ண் அம்மாள் (Miss C. C. Ciberne) ஆலங்குளத்துக்குச் சென்று, லீதியாளுடன் நெடுநேரம் உரையாடி அவளைப் படம் எடுத்துத் தன் சினேகிதியான மிஸ். சாராடக்கர் அம்மாளுக்கு அனுப்பினார். திருநெல்வேலி கிறிஸ்தவர் ஒருவரின் படம் எடுக்கப்பட்டதும் மேல் நாட்டுக்கு அனுப்பப்பட்டதும் இதுவே முதல் தடவையாகும். மிஸ் சாரா டக்கர் அதைத் தன் மேஜை மீது வைத்திருந்தார்.

அது நடந்து மூன்றாண்டுகளுக்குப் பின் (1856), லீதியாள் வியாதிப்பட்டாள். அவளுக்கு உதவியாயிருந்த அவளது வாலிப வயதினனான மகனும் வியாதிக்குள்ளானாள். அவ்வாலிபன் தன் தாயைப்போலவே தெய்வபக்தி மிகுந்தவன். நல்லூர் மிஷனெரி W. கிளார்க் ஐயரும் அம்மாளும் அடிக்கடி ஆலங்குளத்துக்குப் போய் தாயையும் மகனையும் பார்த்து ஜெபித்து வந்தனர்.

இந்த வியாதிப் படுக்கையின் முடிவு என்னவாயிற்று என்று நமக்குத் தெரியவில்லை. கிளார்க் ஐயர் தனது, 1856 ஜனுவரி 27 தேதியிட்ட குறிப்பில், "லீதியாவும் அவளது மகனும் வியாதியாயிருக்கிறார்கள். மகனுடைய நிலைமை அதிகக் கவலைக்கிடமாயிருக்கிறது. அவன் பிழைப்பது எதிர்பார்க்கக் கூடியதாயில்லை. தன்னுடைய இரட்சிப்பைப்பற்றிக் கவலையற்றவனாக அவன் வாழவில்லை', என்றெழுதுகிறார்.

இதற்குப் பின் லீதியாளைப் பற்றி நமக்கு ஒன்றும் தெரியவில்லை. எனினும் ஒரு நிச்சயம் நமக்கு உண்டு . 'அவள் ஒரு பரிசுத்தவாட்டி'

மன்னா செல்வகுமார்

# தொடரோட்டம் இன்றும் தொடர்கிறது!

## பிளாரன்ஸ் சுவைன்சன்

நிருபா ஜேசுவடியான்

செல்வந்தரின் குடும்பத்தில் மகளாக பிறந்தாலும், தன்னை சுற்றி நடக்கும் சமுதாயத் தீமைகளை நன்கு உணர்ந்த பெண்ணாக பிளாரன்ஸ் சுவைன்சன், 1882ம் ஆண்டு தன்னுடைய 29ம் வயதில் இந்திய மண்ணில் கால் பதித்தார். அத்தீமைகளை அகற்ற எதையாகிலும் செய்ய வேண்டும் என்ற துடிப்போடு, பஞ்சாப் மாநிலம் அமிர்தசரஸ் பகுதியில் தன்னுடைய ஊழியத்தை ஆரம்பித்தார். நோயால் பாதிக்கப்படும் மக்களின் பினிதீர்க்கும் செவிலியராக அங்கு எட்டு ஆண்டுகள் பணிபுரிந்தார். ஆங்கிலேயத் திருச்சபையின் ஆதரவிலும், ஜனனா மிஷனின் அரவணைப்பிலும் பிளாரன்ஸ் சுவைன்சன் தன்னுடைய மருத்துவப் பணியை அங்கு திறம்பட செய்து வந்தார். அதன் பின் இடமாற்றம் செய்யப்பட்டு ஆயிரக்கணக்கான மைல் பயணம் செய்து பாளையங்கோட்டை வந்திறங்கினார். அவருடைய வருகை சரித்திரத்தில் இடம் பெற்றது.

1892ம் ஆண்டு பாளையங்கோட்டை - சாராள் தக்கர் பள்ளி வளாகத்தில், அம்மையாரின் அரும் முயற்சியால் ஒரு சிறிய மருத்துவமனை உதயமானது. இந்திய செவிலியர்களின் உதவியோடு, பிணியாளிகளின் நோயிற்கு மருத்துவமும், அவர்களின் வயிற்றுப் பசிக்கு உணவையும் அளித்து வந்தார். இவரைப் போலவே சமுதாயப் பணியில் ஆர்வம் கொண்ட பெண்களும் சேர்ந்து, பெண்கள் கல்விக்கு முக்கியத்துவம் அளித்தனர். சமுதாயத்தில் பிற்படுத்தப்பட்ட பெண்களுக்கு தையற் பயிற்சியளித்தார்.

1893ம் ஆண்டு ஒரு நாள் தன் கணவனால் கைவிடப்பட்ட, காது கேளாத வாய் பேசாத இரண்டு பெண் குழந்தைகளுக்கு தாயான ஒரு பெண், பிளாரன்ஸ் சுவைன்சன் அம்மையாரிடம் உதவி கேட்டு வந்தாள். அப்பெண்ணின் கதறல் சத்தம், அம்மையாரின் இதயத்தை அசைத்தது. நன்கு பேசக் கூடிய, சொல்வதை கேட்கும்

திறனுடைய பிள்ளைகளுக்கே கல்வி அளிப்பது பெரும் சவாலாக இருந்த அந்நாட்களில், இப்படிப்பட்ட குழந்தைகளுக்கு எப்படி உதவி செய்வது என திகைத்தார். இவர்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் கற்றுக் கொடுக்க தன்னால் இயலாது என்ற போதிலும், அவற்றை தேவனுடைய அழைப்பாக எண்ணி அவற்றை கற்றுக் கொள்ள முயற்சி செய்தார். 1894ம் ஆண்டு தன் தாய் நாடான இங்கிலாந்திற்கு சென்று காது கேட்காத பிள்ளைகளுக்கு பயிற்றுவிக்கும் முறையை கற்றார்கள். சுட்டெரிக்கும்வெளியிலிருந்துதப்பித்தோம், பிழைத்தோம் என்ற நிம்மதி பெரும் மூச்சிற்கு பதிலாக, னுயஉவலடழடபுபல என்ற செயற்கை முறை கற்றுக் கொடுத்தலை அங்கு கற்றுக் கொண்டு பல உபகரணங்களோடு மீண்டும் பாளையங்கோட்டை வந்தார். காது கேளாதோருக்கும் கல்வி அறிவு கொடுக்க வேண்டும் என்ற தீராத வாஞ்சையால் சாராள் தக்கர் பள்ளி வளாகத்தில் 1895ம் ஆண்டு, காது கேளாதோருக்கான சிறப்புப் பள்ளி உதயமானது. மூன்று காது கேளாத பிள்ளைகளோடு ஆரம்பிக்கப்பட்ட இந்த அற்பமான ஆரம்பம் அதிவேகத்தில் வளர்ச்சி அடைந்தது. இதில் விசேஷம் என்னவென்றால், காது கேளாத பிள்ளைகளை கூட்டிக் கொண்டு வரும் ஒவ்வொருவருக்கும் சன்மானமாக ஒரு ரூபாய் வழங்கப்பட்டது. அன்றைய சென்னை மாநகரத்திலிருந்தும், ஏன் இந்தியாவின் பல்வேறு இடங்களிலிருந்தும் செவித்திறன் குன்றியவர்கள் பாளையங்கோட்டையில் அமைந்திருந்த இப்புதிய பள்ளிக்கு படையெடுக்க துவங்கினார்கள். அந்நாட்களில் இந்தியாவில் மும்பை மற்றும் கல்கத்தா ஆகிய இரண்டு இடங்களில் மட்டுமே இவர்களுக்கான சிறப்பு பள்ளி இயங்கி வந்தது. அதோடு கல்வி கட்டணம் செலுத்தினால் மட்டுமே அவற்றில் கல்வி வசதியை பெரும் வாய்ப்பு இருந்ததால், ஏழை மக்கள் இவற்றில் சேர்ந்து படிக்கும் வாய்ப்பை இழந்திருந்தனர்.

1898ம் ஆண்டு கல்வி கூடத்தின் பெண்கள் பிரிவிற்கும், மறு ஆண்டு ஆண்கள் பிரிவிற்கும், அரசு அங்கீகாரம் கிடைத்தது. 1901ம் ஆண்டு இவ்விரு பிரிவும் இணைக்கப்பட அரசு அங்கீகாரம் கிடைத்தது. 'கண்ணாடி அம்மா' என்று அன்போடு அழைக்கப்பட்ட பிளாரன்ஸ் சுவைன்சன் அம்மையாரின் பார்வை பல ஆண்டுகள் முன்னோக்கிச் சென்றது. செவித்திறனற்றோருக்கான பள்ளியை விரிவாக்க வேண்டும் என்ற அந்த தூரப் பார்வையில் ஒரு தடைக்கல்லும் வந்தது. கல்வி கற்றுக் கொடுக்கும் பணிக்காக மட்டுமே அனுப்பினோமே தவிர, புதிய கல்வி சாலையை நிறுவ அல்ல என்ற ஒரு பெரிய குற்றச்சாட்டை கூறி, அம்மையாரை ஆதரித்து வந்த ஆங்கிலேய ஸ்தாபனம் நிதியுதவி அளிப்பதை நிறுத்தியது. எண்ணியதை முடிக்கும் வரை எதையும் தாங்கும் இதயம் கொண்ட அம்மையார், சம்பளப் பணமே இல்லாமல் பணியை தொடர்ந்தார். இங்கிலாந்திற்கு சென்று தன் நண்பர்களையும், பல செவித்திறனற்றோருக்கான பள்ளிகளையும் சந்தித்து நிதியை திரட்டினார். இங்கிலாந்து ஸ்தாபனம் இவரைக் கைவிட்டாலும், இவரை அழைத்த இயேசு கிறிஸ்துவோ இவரை ஒரு போதும் கைவிடவில்லை. 1902ம் ஆண்டு அம்மையாருக்கு அரசாங்கமே 4674 ரூபாயை மானியமாக வழங்கியது. மெய் சிலிர்த்த அம்மையார் தனது தூரப் பார்வையை தடுத்து நிறுத்த விழுந்த தூசியை உதறிவிட்டு தொடர்ந்து பணி செய்தார். தற்போது



இயங்கி வரும் செவித்திறனற்றோருக்கான பள்ளி அமைந்துள்ள 11 ஏக்கர் நிலத்தையும், அதனைச் சார்ந்த கட்டிடங்களையும் விலைக்கு வாங்கினார். அதன் பின் கிடைத்த மானியத் தொகை, நன்கொடை ஆகியவற்றின் மூலம் கல்வி நிலையத்தை மேலும் விரிவுபடுத்தினார். மாணவர்களின் வயிற்றுப் பசியை நீக்கியதோடு அவர்களின் எதிர்கால வாழ்க்கையிலும் அக்கறை காட்டினார். தையற் பள்ளி, தட்டச்சு, கூடை பின்னுதல், புத்தகம் கட்டுதல், பாய் நெய்தல், சமையல் பொடி தயாரித்தல் என செவித்திறனற்றோரின் திறமைக்கு ஏற்ப தொழிற்கல்வியும் அளித்தார். இவற்றில் சிலருக்கு விவசாயத்தையும் கற்று கொடுத்தார்.

விளக்கை கொளுத்தி மரக்காலால் மூடி வைக்காமல் விளக்குத்தண்டின் மேல் வைப்பார்கள். அப்போது அது வீட்டிலுள்ள யாவருக்கும் வெளிச்சம் கொடுக்கும் (மத் 5:15) என்ற வசனத்தின் படி அம்மையாரால் ஆரம்பிக்கப்பட்ட இப்பணி, அவர்களைத் தொடர்ந்து வந்த மிஸ்.மார்க்கன், திருமதி. குவாண்டா சிட்டெண்டன், திரு. சிட்டெண்டன் தம்பதியினர் போன்றோர் எண்ணெய் ஊற்றி விளக்கை பிரகாசிக்கச் செய்தனர். அவர்களுக்குப் பின் அப்பணி இந்தியர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. இன்று தமிழ்நாட்டில் மட்டுமின்றி, அண்டை மாநிலம், நாடுகள் என பல இடங்களிலும் இப்பள்ளிகள் உருவாக்கப்பட்டுள்ளது. இதன் மூலம் ஆயிரக்கணக்கான மாணவர்கள் பயன்பெற்று வருகின்றனர்.

'நன்மை செய்யும்படி உனக்குத் திராணியிருக்கும்போது, அதை செய்யத் தக்கவர்களுக்குச் செய்யாமல் இராதே'. நீதிமொழிகள் 3:27.

'மிகவும் சிறியவராகிய என் சகோதரரான இவர்களில் ஒருவனுக்கு நீங்கள் எதைச் செய்தீர்களோ, அதை எனக்கே செய்தீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்'. மத்தேயு 25:40 என்ற வேத வசனங்களின் படி, நாம் வெறும் பேசுகிறவர்களாக மட்டுமல்லாமல், செயல்படுகிறவர்களாகவும் இருப்போம். நம்மையும் சரித்திரம் நினைவு கூறும்.

# சகோதிரி சாரா நவரோஜி வாழ்க்கை குறிப்பு

சகோதிரி சாரா நவரோஜி (1939-2014), தனது பெற்றோருக்கு இளைய குழந்தையாகப் பிறந்தார், சாரா தனது தந்தை சாலமன் ஆசீர்வதமிடமிருந்து கர்நாடக இசையைக் கற்றுக்கொண்டார், அவர் ஒரு வயலின் கலைஞர் மற்றும் கர்நாடக இசை அதிபராக இருந்தார். இளம் வயதிலேயே இசையின் மீதான தனது அன்பை அடையாளம் கண்டுகொண்ட அவரது தந்தை, தனது சொந்த பெயருக்குப் பதிலாக 'நவரோஜி' என்ற குடும்பப்பெயரைக் கொடுத்தார். நவரோஜ் கர்நாடக இசையில் ஒரு ராகம். 1960 ஆம் ஆண்டில், இலங்கையில் மிஷன் வேலைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டபோது அவருக்கு வயது 21 தான். அவள் தனுஷ்கோடியிலிருந்து பயணம் செய்யவிருந்தாள். கடலோர நகரத்தை அடைய, சாரா எக்மோரிலிருந்து ஒரு ரயிலை எடுக்க வேண்டியிருந்தது. ரயிலில் ஏறிய பிறகு, அவள் வருவதற்கு ஆவலுடன் காத்திருந்தாள் (அவளுடைய தந்தை அவளுக்கு 10 வயதாக இருந்தபோது) அவளைப் பார்க்க. ஆனால் நிமிடங்கள் தேர்வு செய்யப்பட்டன, அவளுக்கு எந்த அடையாளமும் இல்லை. ரயிலுக்குள் இருக்கும் போது அழகான தமிழ் பாடலை இசையமைக்க இந்த விறுவிறுப்பான சந்தர்ப்பம் அவளைத் தூண்டியது: 'என்னை மறவா யேசு நாதா,' இது ஒரு தாய் தன் குழந்தையை மறந்தாலும் இறைவனின் தவறாத அன்பைக் காட்டுகிறது.

தமிழ் கிறிஸ்தவ பக்தி இசையில் ஒரு முன்னோடியாக விளங்கும் இவர், 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கர்நாடக ராகத்தை அடிப்படையாகக் கொண்ட கிறிஸ்தவ கீர்த்தனைகளை எழுதிய இசையமைப்பாளர்களின் அடுத்த பெரிய பெயர். ஒரு சிறந்த இசையமைப்பாளர், சகோதரி சாரா நவரோஜி, அவர் அறியப்பட்டபடி, கடந்த ஐந்து தகாப்தங்களாக 356 பாடல்களை எழுதி, இசைக்க, பாடி, பதிவு செய்துள்ளார். அவரது பல பாடல்கள் வெற்றிபெற்றவை மற்றும் பிற கலைஞர்களால் பாடப்படுகின்றன, அத்துடன் உலகம் முழுவதும் உள்ள தமிழ் கிறிஸ்தவ தேவாலயங்கள் மற்றும் வீடுகளில் இசைக்கப்படுகின்றன. எல்லா நேரத்திலும் பிடித்தவைகளான தோத்திரம்பாடியே,' திருப்பாதம் நம்பிவந்தேன் அதேபோல், ' உன்னதமானவரின்' எந்தன் உள்ளம் புது கவியாலே பொங்க பல்வேறு சந்தர்ப்பங்களில் அடிக்கடி கேட்கப்படுகின்றன, ஆனால் இவை சாராவின் படைப்புகள் என்று பலருக்குத் தெரியாது - அவை அவற்றில் அடங்கும் அவரது பல பசுமையான வெற்றிகள்.

எந்தன் உள்ளம் புது கவியாலே பொங்க
இயேசுவை பாடிடுவேன்
அவர் நாமம் ஊற்றுண்ட பரிமள தைலம்
அவரையே நேசிக்கிறேன்

அல்லேலூயா துதி அல்லேலூயா - எந்தன்
அண்ணலாம் இயேசுவை பாடிடுவேன்
இத்தனை கிருபைகள் நித்தமும் அருளிய
கர்த்தரைக் கொண்டாடுவேன்

சென்ற காலம் முழுவதும் காத்தாரே ஓர்
சேதமும் அணுகாமல்
சொந்தமாக ஆசீர் பொழிந்தெனக் கின்றும்
சுக பெலன் அளித்தாரே - அல்லேலூயா

சில வேலை இமைப்பொழுதே தம் முகத்தை
சிருஷ்டிகர் மறைத்தாரே
கடுங்கோபம் நீக்கி திரும்பவும் என்மேல்
கிருபையும் பொழிந்தாரே - அல்லேலூயா

பஞ்ச காலம் பெருகிட நேர்ந்தாலும் தாம்
தஞ்சமே ஆனாரே
அங்கும் இங்கும் நோய்கள் பரவி வந்தாலும்
அடைக்கலம் அளித்தாரே - அல்லேலூயா



கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் மாத இதழை தமிழ் வரலாற்று அறிஞர்களை சந்தித்து கொடுத்த பொழுது எடுத்த படங்கள்


வரலாற்றுச் ஆய்வாளர் சகோதரர் கைவல்யம் டேவிட் அவர்களை சந்தித்த பொழுது


வரலாற்று ஆய்வாளர் அண்ணன் சிந்தனை அவர்களுடன்


போப் கல்லூரி முதல்வர் அவர்களுடன்


இலங்கை அருள்திரு ஜான் ஏசாயா அவர்களை சந்தித்த பொழுது


திருச்சி திரு கருப்பசாமி தேவகிருபை அக்கா குடும்பத்தை சந்தித்த பொழுது


அருள்திரு ஆல்பர்ட் ஸ்டீபன் ஐயா அவர்களை சந்தித்த பொழுது


நம்முடைய சங்க உறுப்பினருடன்


போப் கல்லூரி நூலக அலுவலர் திரு கிப்சன் அவர்களுடன்



திருநெல்வேலி கிறிஸ்தவ வரலாற்றுச் சங்கத்தின் சார்பாக வெளியிடப்படும் மாத ஆய்விதழ். தொடர்புக்கு +91 91767 80001